இராமாயணத்திலே கூறப்பட்டுள்ளது. அசோகவனத்திலே சிதைக்குக் காவலாக இருந்துவந்த திரிஜடை கண்ட கனவையும், அயோத்தியிலே இராமனுக்கு மகுடாபிஷேகம் செய்யவேண்டுமென்று தசரதர் ஏற்பாடு செய்துவந்த சமயம் தன் தாயவழிப் பாட்டனான கேகய மன்னனிடம் சென்றிருந்த பரதன் கண்ட கனவையும் முக்கியமானவைகளாக எடுத்துக் காட்டலாம். இன்னும் இராமனுக்கு மகுடாபிஷேகம் செய்யவேண்டுமென்று திடீரென்று அவசரமாக முடிவு செய்ய நேர்ந்ததைப் பற்றிக் கூறும்போது தசரதர், இடியுடன் கூடிப் பெரும கோஷத்துடன் ஆகாயத்திலிருந்து தம் முன்னிலையில் கொள்ளி விழுந்ததாகவும், ஜோதிட சாஸ்திரப்படி தம்முடைய நக்ஷத்திரம் குரூரக்கிரகங்களால் பீடிக்கப்பட்டிருப்பதாகவும் அதனால் ராஜமரணமோ அல்லது ஏதாவது பெரிய விபத்தோ நேரிடும் என்று அறிஞர்கள் உரைப்பதாகவும் காரணம் காட்டியிருக்கிறார்.

சிலப்பதிகாரத்திலே, சிலம்பு விற்கப்போன கோவலன் மதுரையில் கொலையுண்டதையடுத்து அவன் மனைவி தங்கியிருந்த புறச்சேரியிலே உற்பாதங்கள் ஏற்பட்டனவாம்.

" குடத்துப் பால் உறையாமையும்
குவி இமில் ஏற்றின
மடக் கண் நீர் சோர்தலும்
உறியில் வெண்ணெய் உருகாமையும்
மறி முடங்கி ஆடாமையும
மால் மணி நிலத்து அற்று வீழ்தலும்
வருவது ஓர் துன்பம் உண்டு, "

[ஆய்ச்சியர் குரவை.]

" குடத்துப் பால் உறைய வில்லை ; வெண்ணெய் உருகவில்லை ; கன்றுக்குட்டிகள் துள்ளி ஆடவில்லை ; பட்டியில் எருதுகள் கண்ணீர் சொரிந்தன ; பசுக்களின் கழுத்தில் கட்டியிருந்த மணிகள் தாமாகவே அறுந்து விழுந்தனவாம்." இவற்றைக்கண்ட மாதரியும் மற்றோரும் பெருங்கவலை கொண்டார்களாம்.

மனிதர்களுடைய குரலும் அவர்களுடைய நிலையை எடுத்துக்காட்டிவிடும் என்பதை உணர்த்தும் கதைகளும் வழக்கில் இருந்திருக்கின்றன. புத்தமத நூலான " தம்மபத " த்துக்குப் புத்தகோசர் எழுதியுள்ள அட்டகதை என்னும் உரையில் காணும் கும்பகோசகன் கதையை இதற்கு உதாரணமாகக் காட்டலாம். கும்பகோசகன் (குடப்பணக்காரன்) பெரும்பணக்காரன். அவன் தன் செல்வம் முழுவதையும் புதைத்து வைத்துவிட்டுக் கந்தல் துணியை உடுத்து யாரும் அறியாதபடி தன்னை உருமாற்றிக்கொண்டு கூலியாட்களுக்கு ஊழியனாகக் குற்றேவல் புரிந்து அதன் வருமானத்தைக் கொண்டு தன் வாழ்க்கையை நடத்திவந்தானாம். ஒரு சமயம் அவன் குரலைக் கேட்ட அரசன், 'அது ஒரு பணக்காரன் குரல்," என்று கூறினானாம். அரண்மனைப் பெண் ஒருத்தி அவனைப் பலவிதமாகப் பரிட்சித்துக் கடைசியில் அரசன் கூறியது சரியே என்பதை நிரூபித்து அவன் வேஷத்தைக் கலைத்துவிட்டாளாம்.

Samu.—D

சாஸ்திர நூல்களை அவர்கள் மதக் கிரந்தங்களாகக் கொள்ளவில்லை. நாகார்ஜுன கொண்ட என்னும் நாகார்ஜுனர் குன்றில் கிடைத்துள்ள கல்வெட்டு ஒன்றிலிருந்து அங்கே புத்த பகவானுடைய திருவடி சாமுத்திரிகா லட்சணப்படி அமைக்கப்பட்ட செய்தி தெரியவருகிறது; புத்தமதத்தின் பல பிரிவுகளில் ஒன்றைச் சேர்ந்தவர்கள் சாமுத்திரிகா லட்சணத்தை நன்குகக் கற்றவர்கள் என்றும், அத் திருவடியை நிறுவியதற்கு அவர்களே முக்கியஸ்தர்கள் என்றும் கூறப்படுகிறது. சைவ மதத்தின் ஒரு பிரிவான 'ரஸேச்வர தாசன'த்தைச் சேர்ந்தவர்களும் சாமுத்திரிகா லட்சணத்தில் நல்ல தேர்ச்சி பெற்றவர்கள். இப்போது நமக்குக் கிடைக்கும் சாமுத்திரிகா லட்சண நூல்கள் பெரும்பாலும் அவர்கள் இயற்றியவே.

இன்னும் ஆடவர் மகளிர் ஆகியோருடைய சாமுத்திரிகா லட்சணத்தை எடுத்துக்கூறும் நூல்களைத் தவிர வேறு வகையான இலக்கியங்கள் சிலவற்றிலும் அது விரிவாக உரைக்கப்பட்டிருப்பதையும் நாம் காண்கிறோம்.

நம் நாட்டுப் பழைய காவியங்களிலே, அவை எந்த மொழியில் எழுதப்பட்டனவாக இருந்தாலும், காவியத் தலைவன், காவியத் தலைவி ஆகியோருடைய அங்க வருணனைகள் ஒவ்வொன்றிலும் விவரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். அவ்விதம் வருணிக்கப்பெறும் இடங்களிலெல்லாம் அவர்கள் உத்தம லட்சணங்களைப் பெற்றிருந்ததாகவே காணப்பெறுவர். ஆதி காவியம் எனப்படும் வால்மீகி இராமாயணத்திலும் இராமன் சீதை ஆகியவர்களின் அங்க வருணனை காணப்படுகின்றது.

இராமபிரானுடைய சாமுத்திரிகா லட்சணம் காவிய ஆரம்பத்திலேயே காணப்படுகிறது. காவிய கர்த்தாவான வால்மீகியின் கேள்விக்குப் பதில் கூறும் இடத்திலேயே நாரதர் எல்லாக் குணங்களும் பொருந்தியவனான இராமனை வருணிக்க ஆரம்பித்துவிடுகிறார். இதே விஷயம் மறுபடியும் சுந்தரகாண்டத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளது. அசோக வனத்தில் துயரமே வடிவாக அமர்ந்திருந்த சீதையைக்கண்ட அனுமான் அவளுக்குத் தன்னை அறிமுகப் படுத்திக்கொள்ளும் கட்டத்தில் இராமபிரானுடைய அங்க லட்சணங்களை எடுத்துக் கூறுவதாக ஆறு சுலோகங்கள் (35-ஆம் ஸர்க்கம், 16—21 சுலோகங்கள்) உள்ளன. முதல் இரண்டு சுலோகங்களிலே இராமன் நீண்ட கரங்கள், சங்கு போன்ற கழுத்து, அழகிய முகம், செவ்வரி படர்ந்த கண் முதலியவற்றை அடைந்தவர் என்று சம்பிரதாயமான முறையில் வருணிக்கப்பட்டுள்ளார். பின்னால் உள்ள நான்கு சுலோகங்களிலே அவருடைய லக்ஷணம் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. சாமுத்திரிகா லட்சணம் அறிந்தால் தான் அந்த நான்கு சுலோகங்களுக்கும் சரியான பொருள் காணமுடியும்.

அவர் மூன்று (அதாவது, மார்பு, மணிக்கட்டு, முஷ்டி ஆகிய இடங்களில்) உறுதியானவர்: அவருடைய உடலிலே (புருவம், கை, கண்டம் ஆகிய) மூன்று இடங்கள் தொங்குபவை; (மயிர் நுனி, பீஜம், முழங்கால் ஆகிய) மூன்று இடங்கள் சமமாக அமைந்தவை: (வயிறு, நாபி, மார்பு ஆகிய)

மூன்று இடங்கள் உயர்ந்திருப்பவை ; (உள்ளங்கால், உள்ளங்கை, கடைக்கண் ஆகிய) மூன்று இடங்கள் சிவந்திருப்பவை ; (கவிலுள்ள ரேகை, தலை மயிர், லிங்கம் ஆகிய) மூன்றும் மழமழப்பானவை ; (பேச்சு நடை, நாபி ஆகிய) மூன்றும் கம்பீரமானவை (இம்மூன்றுள் நடையென்பதற்குப் பதிலாக விடா என்றும் சிலர் கூறுவர்); (கழுத்திலும் வயிற்றிலும், பனிக்கட்டிலும்) மூன்று மடிப்புகள் காணப்படும் ; (தைலம், அதன் துளி, பாதத்தில் உள்ள ரேகை ஆகிய) மூன்றும் ஆழ்ந்திருக்கும் ; நான்கு இடங்கள் நான்கு வெளியே தோன்றாமல் குறிப்பாகக் காட்டப்பெற்றவை (நரம்பு தோன்றாத கால், ஒரே மயிரையுடைய ரோமகூபம், மேட்டுமுடி, தசைப்பற்று இல்லாத நாபியின் கீழ்ப் பிரதேசம் ஆகிய நான்கும் என்பர் ஒரு சாரார். கழுத்து, குறி, பின்புறம், முழங்கால் ஆகிய நான்கு இடங்களும் குறுகி இருப்பதைக் குறிப்பதாகவும் கொள்வர் வேறு சிலர்) ; (சமம், குண்டு, விசாலம் ஆகிய) மூன்று லக்ஷணங்களையுடைய தலை (மூன்று சுழிகள் கொண்ட தலை எனவும் சிலர் கூறுவர்) ; (கையின் கட்டை விரல் அடியில் நான்கு வேதங்களையும் அறிந்தவர் என்பதைக் குறிப்பனவாக உள்ள ரேகைகளான) நான்கு கலைகள் ; (நெற்றியில் காணும்) நான்கு ரேகைகள் ; நான்கு முழம் (அதாவது தொண்ணூற்றாறு விரற்கடை உயரம் உள்ள) தேகம் ; (கை, முழங்கால், தொண்டை, கன்னம் ஆகிய) நான்கும் சமமாக அமைந்தவை ; (புருவம், நாசித் துவாரம், கண், காது, உதடு ஸ்தன நுனி, முழங்கை, மணிக்கட்டு, முழங்கால், பீஜம், இடுப்பின் பக்கம், கை, கால், பிருஷ்ட பாகம் ஆகிய) பதினான்கு இடங்களில் ஒன்றுக்கொன்று சமமான ஜோடி; நான்கு (அழகும், உறுதியும் வாய்ந்த) பற்கள் ; (யானை, சிங்கம், புலி, எருது ஆகிய) நான்கின் நடை ; பருத்து அழகான உதடு, தாடை, மூக்கு ; (தலை மயிர், கண், பல், சருமம், பாதம் ஆகிய) ஐந்து இடங்களில் பளபளப்பு ; (உடல், முதுகு, கை, கால், விரல் —அல்லது மூக்கு என்றும் சிலர் கொள்வர்—கண், காது, லிங்கம் ஆகிய) எட்டு இடங்கள் நீண்டிருப்பவை ; (முகம், வாய், கண், நாக்கு, உதடு, கன்னம், ஸ்தனம் நகம், உள்ளங்கை, உள்ளங்கால் ஆகிய) பத்து இடங்களில் தாமரை மலர் போன்ற சிவப்பு ; (மார்பு, முன் தலை, முகம், கழுத்து, தோள், பாஹு, நாபி, புஜம், பிருஷ்ட பாகம், குரல் ஆகிய) பத்தும் பருத்தவை ; (தேஜஸ், செல்வம், புகழ் ஆகிய) மூன்றில் எங்கும் பரந்தவர் ; (கண், பல் ஆகிய) இரண்டில் வெண்மை ; (அக்குள் வயிறு, மார்பு, மூக்கு, தோள், நெற்றி ஆகிய) ஆறு இடங்களில் உயர்வு பெற்றவர் ; (தலை மயிர், புறமயிர், மீசை, நகம், கட்டை விரல், சர்மம், கணுக்கால்—அல்லது லிங்கம் என்பர்

சிலர்—ஆகிய எழோடு கண் பார்வை, புத்தி ஆகியவை சேர்ந்த) ஒன்பது கூர்மையாகப் பெற்றவர் ; மூன்றில் விய பிதரவர் (நாள்தோறும் மூன்று வேளைகளிலும் செய்யவேண்டிய கிரியைகளை முறைப்படி செய்வர் என்றும் ; அறம், பொருள் இன்பம் ஆகிய மூன்றில் நிறைந்தவர் என்றும் இருவிதமாக இதற்குப் பொருள் கூறுவர்.) *

சீதையின் லட்சணத்தையும் வால்மீகி யுத்தகாண்டத்திலே (48-ஆம் சர்க்கத்தில்) வருணித்திருக்கிறார். அதை அவள் வாயாலே உரைப்பதாகக் கூறியிருக்கிறார். இந்திரஜித்தினால் அடிபட்ட இராமலக்ஷ்மணர்கள் உணர்வு இழந்து, உயிர் அற்றவர்களைப் போல யுத்தகளத்திலே கிடக்கையில், அவர்கள் இறந்துவிட்டார்களென்று கூறி அந்தக்காட்சியைக் காட்டுவதற்காகச் சீதையைப் புஷ்பக விமானத்தில் ராட்சஸர்கள் யுத்தகளத்துக்கு அழைத்து வருகிறார்கள். அப்போது அவள், "ஸதிரீ ஸாமுத்திரிகா லட்சணம் அறிந்தவர்கள் என்னிடம் எல்லா லட்சணங்களும் இருப்பதாகச் சொல்லி, நான் என் கணவருடன் பட்டாபிஷேகம் செய்துகொள்வேன்

---

* அரபு நாட்டுப் பெண்களைப்பற்றிப் பழைய ஆசிரியர் ஒருவர் எவ்விதம் எழுதியுள்ளாரென்று எல்—இபுஷி என்னும் ஆசிரியர் பின் வருமாறு வருணிக்கிறார். "பெண்களுக்கு நான்கு இடங்கள்—தலை மயிர், புருவம், கண் இமை, கண்ணின் கருவிழி—கறுப்பாக இருத்தல்வேண்டும்; நான்கு—சருமத்தின் நிறம் கண்ணின் வெள்ளைப் பாகம், பல், கால்—வெண்மையாக இருத்தல் வேண்டும்; நான்கு—நாக்கு, உதடு, கன்னத்தின் நடுப்பகுதி, பல் ஈறு—சிவப்பாக இருத்தல் வேண்டும், நான்கு—தலை, கழுத்து, முன் கை, கணுக்கால்—வட்டமாக இருத்தல் வேண்டும் ; நான்கு—முதுகு, விரல், கை, கால்—நீண்டிருத்தல் வேண்டும்; நான்கு—நெற்றி, கண், மார்பு; இடை—அகன்றிருக்க வேண்டும் ; நான்கு—புருவம், மூக்கு, உதடு, விரல்—மென்மையாக மெலிந்து இருக்கவேண்டும் ; நான்கு—முதுகின் அடிப்பாகம், தொடை, முழங்காலுக்குக் கீழே உள்ள ஆடு சதை, முழங்கால்—கனத்து இருக்கவேண்டும் ; நான்கு—காது, கொங்கை, கை, பாதம்—சிறுத்து இருக்கவேண்டும்." (லேன் என்பார் எழுதிய "மத்திய காலத்து அரபு வாழ்க்கை", பக்கங்கள் 214—216.)

'கார்மென்' என்னும் பிரெஞ்சு நாவலில் பின் வருமாறு காணப்படுகிறது. "மங்கை ஒருத்தி நல்ல அழகாக இருக்கிறாள் என்று கருதப் பெறுவதற்கு அவள் முப்பது லட்சணம் (வரி) பொருந்தியவளாக இருத்தல் வேண்டும் என்று ஸ்பெயின் தேசத்தவர்கள் கூறுவர். அதாவது மூன்று மூன்றாகப் பத்து அடைமொழிகளால் குறிப்பிடக் கூடிய லட்சணங்கள் வாய்த்திருத்தல் வேண்டும். உதாரணமாக, மூன்று இடம் கறுப்பாக இருத்தல்வேண்டும். அவை ; கண், இமை, புருவம் ஆகும். மூன்று—கை, உதடு, கேசம்—மென்மையாகச் சிறந்திருக்க வேண்டும். இவ்விதமே நான் மற்றவைகளும். ...வாதத்துக்கு பிராந்தோம் பார்க்க".

மற்றொரு வகையான நூல்களிலும் அதாவது காமசாஸ்திர நூல்களிலும், சாமுத்திரிகா லட்சணம் விவரிக்கப்பட்டுள்ளது. பத்மினி, சித்திரிணி, சங்கினி, ஹஸ்தினி என்று நான்கு வகையாகப் பெண்கள் அவர்களுடைய தேக அமைப்பின்படி காம சாஸ்திரங்களிலே பகுக்கப்பட்டிருப்பதை பலரும் அறிவர். ஆனால் இப்போது நமக்குக் கிடைப்பவற்றுள் மிகவும் பழமையானதான வாத்ஸ்யாயனருடைய காமசூத்திரத்திலே இந்த நான்கு வகைப் பாகுபாடு காணப்பெறவில்லை. அதிலே ஆண்களும் பெண்களும் அவர்களுடைய ஜனனேந்திரிய அளவின்படி மூன்று மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். இந்தப் பாகுபாட்டிலே அவர்களுடைய மற்ற லட்சணங்கள் கணக்கிடப்படவில்லை. எனினும் சாமுத்திரிகா லட்சணத்தைப்பற்றி அவர் குறிக்காமலும் இல்லை. எந்த எந்தப் பெண்களை மணக்கலாகாது என்பதைக் கூறும் இடத்திலே அதைப்பற்றி அவர் குறிப்பிட்டிருக்கிறார். இந்த நான்கு வகைப் பாகுபாடு வாத்ஸ்யாயனருக்குப் பூர்வாசாரியர்களாக விளங்கிய நந்திசா, கோணிபுத்திரா ஆகியோர்கள் வகுத்தது என்பர். இது பிற்காலத்திய நூல்கள் எல்லாவற்றிலும் காணப்படுகிறது. கொக்கோகர் எழுதிய ரதிரகசியத்தில் விவரிக்கப்பட்டுள்ள இந்தப் பகுப்பு பிற்காலத்தில் பிரபலமாகிவிட்டது. இவைகளேயன்றி, பெண்களின் சத்துவம் முதலியவற்றைக்கொண்டு அவர்களை வெவ்வேறு வகைகளாகப் பிரித்து அவற்றுள் ஒவ்வொரு வகைப்பெண்ணும் எவ்விதம் இருப்பாள் என்று கூறும் அவளுடைய சாமுத்திரிகா லட்சணத்தையும் பிற்காலத்துக் காமசாஸ்திர நூல்களில் காணலாம். இவ்விதமான பிரிவுகளும் பூர்வாசாரியர்கள் செய்தவைகளே என்பர்.

இத்தகைய நூல்களாலேயே போதும் ஆண்களுடைய சாமுத்திரிகா லட்சணங்களைக் கொடுக்கும் நூல்களைக்காட்டிலும் பெண்களைப்பற்றிய நூல்கள் பிற்காலத்தில் அதிகமாகத் தோன்றியுள்ளனவென்றும், சாமுத்திரிகா லட்சண நூல்கள் எல்லாவற்றிலுமே சிற்றின்பம் நுகர்வதைப் பற்றிய மனப்பான்மையும் குணங்களும் அதிகமாகக் கொடுக்கப்பட்டுள்ளனவென்றும் சொல்லலாம். உண்மையில் இந்தப் பதிப்பில் அடங்கிய ஸ்திரீ லட்சணத்தின் உரைநடைப்பகுதியில் அது, "பூலோகத்திலே பிறக்கிற பெண்களிலே பதிவிரதையாயிருக்கிறவளையே விவாகம் பண்ணவேண்டுமென்று திருவுள்ளம் பற்றினீரே! அந்தப் பெண்கள் வாழ்க்கைப்படுகிறதுக்கு முன்னே பதிவிரதை என்கிறதும் விபசாரி என்கிறதும் எப்படி அறிகிறது?" என்ற கேள்விக்குப் பதில் கூறுவதாக எழுந்தது என்று அதன் ஆரம்பம் உரைக்கிறது.

சாமுத்திரிகா லட்சணத்தை அறிந்து கையாள்வது நம் நாட்டில் மட்டுமே காணப்படுவதென்று கொள்ளவேண்டியதில்லை. உலகம் முழுவதிலும் அது வழக்கில் உள்ளதென்று சொல்லலாம். பண்டைக்காலத்தில் கிரேக்கர்களிடையே அது வழங்கிவந்து பின்னால் ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் பரவியிருக்கிறது. அவ்விதம் மேலை நாட்டிலே சாமுத்திரிகா லட்சணத்தை அறிந்து நூல் எழுதியவர்களுள் அரிஸ்டாட்டில், பிளேட்டோ ஆகியவர்களை முக்கியமானவர்களாகக் கூறலாம். விஞ்ஞான முறைப்படி சாமுத்திரிகா

லட்சணமும் ஒரு சாஸ்திரமேயாகும் என்பதை நிரூபித்து லவாதர், சார்லஸ் டார்வின் ஆகியோர் எழுதியிருக்கிறார்கள். பிற்காலத்திலும் எத்தனையோ நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றுள் ' புதிய சாமுத்திரிகா லட்சணம் ' (தி நியூ பிஸியாக்ராமி) என்ற பெயரில் சாமுவேல் வெல்ஸ் என்பவர் எழுதிய புத்தகமே சிறந்ததென்பர். அதிலே ஆசிரியர் தமக்கு முன் அந்தச் சாஸ்திரத்தைப் பின்பற்றவர்கள் கண்ட முறைகளையும் கொண்டிருந்த கொள்கைகளையும் சுருக்கமாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

சாமுத்திரிகா லட்சணம் உடற்கூறு சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. நவீன விஞ்ஞான முறைப்படி அதை ஆராய்ந்தால் இரண்டு விஷயங்கள் தெளிவாகும். 'உள்ளத்து இயல்புகளில் காணும் வேறுபாடுகளுக்கு ஏற்பவே புறத் தோற்றத்தில் காணும் வேறுபாடுகள் அமையும்' என்பது ஒன்று. உதாரணமாக, நாம் எத்தனையோ மனிதர்களைப் பார்க்கிறோம். சிலருடைய முகம் அழகாகவும், சீராகவும் அமைந்திருந்தும், களையற்றுக் கவர்ச்சி இல்லாமல் இருக்கிறது. மற்றுஞ் சிலருடைய முகமோ, நல்ல அழகு என்று சொல்லமுடியாமல் இருந்தாலும், களை பொருந்திக் குறுகுறுப்பாக இருக்கிறது. அவர் அவர் உள்ளத்தில் தோன்றும் மனவெழுச்சிகளும் அவற்றால் ஏற்படும் மனநிலையுமே அவர் அவர் முகத்திற்காணும் களையையும் குறுகுறுப்பையும் உண்டாக்குகின்றனவென்பர். 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்னும் பழமொழியும் இதை ஒட்டியே ஏற்பட்டது போலும். உடலின் ஒவ்வோர் உறுப்பின் அசைவையும் மூளை அல்லது உள்ளம் என்னும் அறிவு கட்டுப்படுத்தி நடத்துகிறது என்றும் அதனால் ஏற்படும் மாறுபாடு அந்த அந்த உறுப்பில் பிரதிபலித்து நிலைபெறுகிறதென்றும் சொல்வர். சருமத்தின் தோற்றம், உணர்ச்சி, மென்மை ஆகியனவும் அதனால் பாதிக்கப்படுகின்றனவாம். இவ்விதம் உடலின் ஒவ்வொரு பாகமும்—தலை, முகம், மார்பு, கை, கால், நடை, குரல், இன்னும் சருமம் ரோமம் ஆகியவற்றின் அமைப்பு, தன்மை எல்லாம்—சாமுத்திரிகா லட்சணத்தின் சின்னங்களாகவே விளங்குகின்றன. எனினும் ஒரு விஷயத்தை நாம் இவ்விடம் குறிப்பிடவேண்டும். முகம், கை, கால் போன்று எளிதில் பிறர் கண்ணுக்குப் படக்கூடிய இடங்களையே பிரதானமாகக் கருதிச் சாமுத்திரிகா லட்சணத்தைத் தொகுத்திருக்கிறார்கள். மற்ற உறுப்புக்களைப் பற்றிக் கூறியிருப்பினும் அவை குறைந்த அளவிலேயே உள்ளன எனலாம்.

' உடலின் பொது அமைப்புக்கு ஏற்பவே ஒவ்வோர் உறுப்பும் அமைந்திருக்கும்: அதே போல ஒவ்வோர் உறுப்பும் உடலின் மொத்த அமைப்பின் ஒரு பாகமாகும்' என்பது இரண்டாவது. இந்த உண்மையை நன்றாக அறிந்திருந்ததாலேயே முன்னாளில் ஓவியர்களும் சிற்பிகளும் தங்கள் கலைத்திறன் நன்கு மிளிர அருமையான உருவங்களைச் சமைக்க முடிந்தது. உடலின் ஒவ்வோர் உறுப்பும் மற்ற உறுப்புக்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஒரு குறிப்பிட்ட அளவில் அமைந்திருக்கக் காணலாம். மணிக்கட்டிலிருந்து நடு விரலின் நுனி வரையில் உள்ள கையின் அளவு மோவாய்க் கட்டையிலிருந்து நெற்றிமயிர் வரை வரையில் உள்ள முகத்தின் அளவுக்குச்

சமமாக இருக்கும். இன்னும் முகத்தை மூன்று சமபாகங்களாக வகுக்லாம். நெற்றியுச்சியில் உள்ள மயிர் வகிட்டிலிருந்து புருவம் வரையில் ஒரு பாகமும், புருவத்திலிருந்து மூக்கின் நுனிவரையில் மற்றொன்றும், மூக்கின் நுனியிலிருந்து மோவாய் வரையில் மூன்றுவதுமாக அவை அமையும். இம்மாதிரியே, ஒருவன் தன் இரு கைகளையும் பக்கவாட்டிலே நீட்டி நின்றால் ஒரு கையின் நடுவிரல் நுனியிலிருந்து மற்றொரு கையின் நடுவிரல் நுனி வரையில் உள்ள அளவு (ஒரு மார்பு நீளம் என்று பாமர வழக்கில் குறிக்கப்படுவது) அவனுடைய உயரத்துக்குச் சமமாக இருக்கும் என்றும் சொல்வர். இதேபோல இன்னும் எத்தனையோ வகையான அளவுகள் உள்ளன. அவை சிறப் நூல்களில் விவரிக்கப்பட்டுள்ளன. மனிதர்களிடையில் காணும் இந்த அளவுகளிலே அவர் அவர் இயல்புக்கு ஏற்பச் சில சமயங்களில் நூல் பிரமாணத்தனவாக வேறுபாடுகள் காணப்படும். உவை அவர் அவர் லட்சணத்தை எடுத்துக் காட்டுவனவாக அமையும். இத்தகைய அளவுகளை நன்கு அறிந்ததாலே போலும் நேரில் காணாத ஒரு மனிதனுடைய உறுப்பு ஒன்றை மட்டும் பார்த்து விட்டு அவனுடைய முழு உருவத்தையும் சிருஷ்டித்துக் காட்டியதாகக் கூறும் சம்பவங்கள் நாடோடிக் கதைகளில் காணப்படுகின்றன. சீதை அசோகவனத்தில் சிறை இருந்த காலத்தில் அவள் இராவணனுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்ததே இல்லையாம். குனிந்த தலை நிமிராமல் இருந்த அவள் அவனுடைய பாதங்களை மட்டுமே பார்த்திருந்தாளாம். எனினும் இராவணவதம் ஆகி நீண்டகாலத்துக்குப் பிறகு அவள் அயோத்தியில் இருந்த நாளில் தன் நாத்தனார், அதாவது கைகேயின் மகள், ஒருத்தியின் வற்புறுத்தலால் இராவணனுடைய உருவத்தைத் தத்ரூபமாகப் பூமியில் வரைந்து காட்டினாளாம். அதுவே அவள் இரண்டாவது தடவை வனவாசம் போவதற்குக் காரணமாயிற்று என்று ஒருகதை உண்டு. இன்னும், நீராடிக்கொண்டிருந்த ராஜகுமாரி ஒருத்தியின் தலைமயிர் ஒன்று உதிர்ந்து நீரோடு அடித்துச் செல்லப்பட்டதாம்; அதைக்கண்ட ராஜகுமாரன் ஒருவன் அந்த ஒற்றை மயிரைக் கொண்டு அவளுடைய முழு உருவம் எவ்விதம் எழில் பெற்று விளங்கும் என்பதை மனத்தால் உருவகப்படுத்தி அவளைப்போன்ற சித்திரத்தை வரைந்தானும்; அதைக் கொண்டு கடைசியில் அவன் அந்த ராஜகுமாரியையே அடைந்தானும். இம்மாதிரி எத்தனையோ கதைகள்.

இவற்றைக் கவனித்தால் சாமுத்திரிகா லட்சணத்துக்கும் அழகின் உருவத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருப்பது விளங்கும். சாமுத்திரிக சாஸ்திரப்படி உத்தம லட்சணம் பொருந்தியவர்களே யாவரும் கண்டு வியக்கும்படி அசாதாரணமான அழகு பெற்றிருப்பர் என்று கூறுவர்.

பரந்த இவ்வுலகத்திலே எத்தனையோ தேசங்கள் உள்ளன. ஒவ்வொரு தேசத்திலும் பலவகையான மக்கள் வாழ்கின்றனர். அவர்களிலே ஒவ்வொரு வகையாரும் அழகு என்பது எப்படி இருக்கவேண்டும் மென்பதைப்பற்றி வேறுவேறான அபிப்பிராயங்களைக் கொண்டிருக்கிறார்கள். ஆப்பிரிக்கா தேசத்து மக்களில் சிலர் பெண்மக்கள் மிகவும் பருத்த

பிருஷ்பாகத்தைப் பெற்றிருக்கவேண்டும் என்று விரும்புகின்றனர்; மற்றுஞ் சிலர் தளர்ந்து சரிந்த கொங்கைகளையே விரும்புவர். சீனதேசத்தில் பெண்களின் பாதம் மிகவும் சிறத்திருக்கவேண்டுமென்று கொள்வர். அரபுதேசத்திலே பெண்களின் இருபுருவங்களும் நடுவில் கூடியிருப்பதையே விரும்புவர் என்று அரேபிக்கதைகளிலிருந்து தெரிகிறது. அந்த அந்த நாட்டுப் பெண் மக்கள் அந்த அந்த நிலையை அடையப் பல விதமான செயற்கை முறைகளையும் கையாண்டுவந்தனர் என்று கூறுவர்.

அவ்விதமாயினும், அழகின் லட்சணம் எது என்பதைப் பற்றி உலகம் முழுவதும் ஒரே விதமான கொள்கையே இருந்து வருகிறது. பலவேறு தேசங்களின் ஆசிரியர்கள் தங்கள் இலக்கியங்களிலே அழகினை வருணித்துக் கூறுவதை ஒப்பிட்டுப் பார்த்தால் இது நன்கு விளங்கும். இத்தகைய வருணனைகள் பலவற்றைத் தொகுத்து ஹாவலக் எலலிஸ் என்னும் ஆசிரியர் தம்முடைய நூலில் கொடுத்திருக்கிறார்.

நாகரிகம் இல்லாதவர்கள் என்று கருதப்படும் பூர்வீகக்குடிகளும் அழகின் லட்சணத்தைப் பற்றி இதுமாதிரியேதான் நினைக்கிறார்கள். திரு வெர்ரியர் எல்வின் என்னும் ஆசிரியர் செய்த ஆராய்ச்சிகளிலிருந்து இது தெரியவருகிறது. மலேநேசியா தீவுகள், ஆப்பிரிக்கா தேசம், அஸ்ஸாம் மலைப் பிரதேசத்தில் நாகர்கள் வாழும் பகுதிபோல ஒன்றுகொன்று வெகுதூரம் விலகியுள்ள நாடுகளில் வாழும் மக்களினிடையே அழகுவாய்ந்தவர்களென்று அந்த அந்த நாட்டார் கருதுபவர்களுடைய புகைப்படங்களைச் சேகரித்து அவர் மத்திய இந்தியாவில் வாழும் 'பைகா' என்னும் பூர்வீகக் குடிகளிடம் காட்டினாராம். அவற்றைப் பார்த்த பைகர்கள் செய்த விமர்சனமும் அளித்த பதிலும் இந்த உண்மையை எடுத்துக்காட்டியதென்று அவர் கூறுகிறார்.

உலகம் முழுதும் அழகின் லட்சணம் ஒரேவிதமாகத்தான் கருதப்பட்டு வருகிறதென்னும் உண்மையை ஆராய்ந்து நிலைநிறுத்திய ஸ்ட்ராட்ஸ் என்னும் ஜெர்மன் ஆசிரியர் பூர்ண வளர்ச்சி அடைந்து அழகுவாய்ந்த பெண் ஒருத்தியின் அங்க அமைப்பு எவ்விதம் இருக்குமென்பதைப் பின் வருமாறு விவரிக்கிறார்.

மென்மையான எலும்பு அமைப்புக் கொண்ட கூடு,
உருண்டு திரண்ட அங்கங்களும் மார்புகளும்,
அகன்ற அடிமுதுகுப் பகுதி,
நீண்டு அடர்த்தியான கேசம்,
தாழ்ந்து குறுகிய பிரதேச அளவே கொண்ட அல்குல் ரோமம்,
குறைவான அக்குள் ரோமம்,
தேகத்தின் பிறஇடங்களில் புறமயிர் இல்லாமை,
மென்மையான சருமம்,
உருண்டையான் மணிக்கட்டு,
சிறுமுகம்,
அகன்ற கண் பள்ளம்,

உயர்ந்து மெலிந்த புருவம்,
தாழ்ந்து சிறுத்த மேற்றாடை எலும்பு,
கன்னத்திலிருந்து கழுத்துக்குச் சரிவான அமைப்பு,
வட்டமான கழுத்து,
சிறுத்து மெலிந்த மணிக்கட்டு,
சின்னஞ்சிறு நகங்களும் நீண்ட ஆள்காட்டி விரல்களும்,
உருண்டையான தோள்,
(வளைவில்லாமல்) நேராகச் சிறுத்துள்ள தோள் எலும்பு,
சிறுத்து நீண்ட உடற்பாகம் (கழுத்திலிருந்து இடைவரையுள்ளது),
சிறுத்த இடை,
குழிவான பிருஷ்டத்தின் மேற்பாகம்,
வட்டமாகப் பருத்து எடுப்பான நிதம்பம்,
வளைந்து குழிந்த நிதம்பத்தின் கீழ்ப்பாகம்,
உருண்டு திரண்ட தொடைகள்,
மழுங்கிய விரிகோண வடிவில் தாழ்ந்த அடிவயிற்றுக் கூடல்,
மிருதுவான முழங்காலின் சில்லு,
வட்டமான கணைக்கால் ஆடுசதை,
சிறுத்த பாடு,
சிறுத்த (கால்) விரல்கள்,
இரண்டாவது விரல் நீண்டும், ஐந்தாம் விரல் சிறுத்தும் இருத்தல்,
அகன்ற முன் பல்.

மேலே கண்ட பட்டியல் தாம் கொண்ட முடிவையே பெரும்பாலும் ஒட்டி இருக்கிறதென்று ஹாவ்லக் எல்லிஸ் கூறுகிறார். இம்மாதிரியே நம் நாட்டுச் சாமுத்திரிகா லக்ஷணத்தில் விவரிக்கப்பட்டுள்ளதையே அது பெரும்பாலும் ஒத்திருக்கிற தென்பதையும் காணலாம்.

அழகு என்பது திடமான ஆரோக்கியத்தைக் குறிப்பதாகும். ஆரோக்கியம் இல்லாவிட்டால் அழகும் நலிந்து விடும். இந்த உண்மையை நீண்ட நாளாக யாவரும் அறிவர். அழகை எடுத்துக்காட்டும் நன்கு வளர்ச்சி பெற்ற உடல், பிடிப்பான தசை, மினுமினுப்புடன் கூடிய அழகிய சருமம், ஒளிபெற்ற கண், மிடுக்குடன் கூடிய நடை, இவையெல்லாம் நல்ல ஆரோக்கியத்தின் அறிகுறிகளே. சிவனைப் பரதெய்வமாக வழிபடுபவர்களுள் ரஸேச்வர தர்சனத்தைப் பின்பற்றும் பிரிவினர்களைப் பற்றி நாம் முன்னரே குறிப்பிட்டிருக்கிறோம். அவர்கள் இந்த உண்மையை நன்கு அறிந்து அதைத் தங்கள் மதக் கொள்கைகளுள் முக்கியமானதாக வலியுறுத்தியிருக்கிறார்கள். அவர்களுடைய மதத்தின் அடிப்படைத் தத்துவத்தைப் பின்வருமாறு சுருக்கமாகச் சொல்லலாம். "மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் வீடு பேறு அடைவதே லட்சியமாகும். அதை அடைவதற்கு ஞானம் அவசியம். வித்தையின் மூலமே ஞானத்தைப் பெறமுடியும். ஆனால் வித்தை பயில்வதற்கு நோயற்ற வாழ்வு அத்தியாவசியமானது. உடலை நல்ல ஆரோக்கியத்துடன் வைத்து கூடிய சித்திகளைப் பெற உதவுபவை அப்ரகம், பாதரசம் ஆகிய இரண்டுமே." இதை யொட்டியே அவர்கள் வழிபாடு, தத்துவம்,

வேதாந்தம் ஆகிய விஷயங்களை மட்டுமல்லாமல், ரஸவாதம், வைத்தியம், மாந்திரிகம், சாமுத்திரிகா லட்சணம், ரேகை சாஸ்திரம் போன்ற பல வேறு விஷயங்களைப் பற்றியும் நூற்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்கள் தங்களைச் சார்ந்தோர் அனைவரும் நல்ல திடகாத்திரர்களாக இருக்கவேண்டு மென்பதை விரும்பி இன்னும் சில கட்டுப்பாடுகளையும் விதித்துக்கொண்டனர். தங்களிடம் தீக்ஷை பெறுகிறவர்கள் குறை ஏதும் இல்லாத திடமான ஆரோக்கியம் பெற்றவர்களாகவே இருத்தல் அவசியம் என்பதை அவர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல் அவ்விதம் சிஷ்யர்களாகச் சேருபவர்களுக்கு இன்ன இன்ன அங்க லட்சணங்கள் பொருந்தியிருக்க வேண்டுமென்பதையும் அவர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். அதே போலத் தான் சைவ மடாலயத் தலைவர்களில் சிலர் குறளன், குறை அங்கத்தவன், நோயுற்றவன் முதலியவர்களைப் பார்க்கவும் கூடாதென்றும், அவ்விதம் பார்க்க நேரிட்டுவிடுமாகில் அதற்காக உடனே பிராயச்சித்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும் விதிக்கப்பட்டுள்ளது.

ரஸேச்வர தரிசனத்தின் முக்கியமான ஆசாரியர்களைச் சித்தர்களென்றும், நாதர்களென்றும் நாத சித்தர்களென்றும் குறிப்பிடுவர். அவர்கள் எத்தனைபேர் என்பதிலே வேறுபாடு உண்டு. அவர்கள் தொகை ஒன்பது முதல் அறுபத்துநான்கு வரையில் பலவிதமாகக் காணப்படும். அதற்கு மேலும் கொள்வாருமுளர். தமிழ் நாட்டிலே காண பரம்பரையாகச் சித்தர்களைப் பதினெண்மர் என்று சொல்வர். எனினும் அத்தகைய சித்தர்கள் என்று கூறப்படுபவர்களின் பெயர்களைச் சேர்த்துப் பார்த்தால் அவர்கள் தொகை பதினெட்டுக்கும் அதிகமாகவே காணப்படும். அவர்களும் மேலே கூறிய விஷயங்களைப் பற்றித் தமிழிலே தங்களுக்கே உரித்தான எளிய தனி நடையில் பல நூல்களை எழுதியிருக்கிறார்கள்.

தமிழில் காணும் சாமுத்திரிகா லட்சண நூல்கள் எல்லாம் முருகக் கடவுள் தம் சிஷ்யரான அகத்திய முனிவருக்கு உரைக்கப்பட்டனவாகவே காணப்படுகின்றன. அவருடைய பெயர் சுப்பிரமணியக் கடவுள் என்றும் சிவ சுப்பிரமணியக் கடவுள் என்றும் குமாரசுவாமியார் என்றும் பலவிதமாகக் குறிக்கப்பட்டுள்ளது. அவரிடம் கேட்டு அறிந்தவற்றை அகத்திய முனிவர் பலருக்கும் உபயோகப்படும்படியாக எழுதி வைத்தாராம்.

அகத்தியர் எழுதியனவாகச் சாமுத்திரிகா லட்சணத்தைத் தவிர வைத்தியம், ஜோஸ்யம், மந்திரிகம் போன்ற வேறு பல துறைகளிலும் அநேக நூல்கள் உள்ளன. இவையாவும் தமிழ் நாட்டுச் சித்தர்கள் எழுதியனவாகக் காணும் ரகத்தைச் சார்ந்தவை. அகத்தியரும் பதினெண் சித்தர்களிலே ஒருவராவர்; அவர் பெயரே முதலில் காணப்படுவது. அவரே தமிழ் நாட்டுச் சித்தர் பரம்பரைக்கு முக்கியமானவர் என்றும் சொல்லலாம். அவரைத் தரிசிப்பதற்காகவே வடக்கிலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்த ஒருவர் திருமூலர் என்னும் சிவனடியாரான சித்தராக ஆனார் என்று பெரிய புராணம் கூறுகிறது. இவற்றைக் கவனிக்கும்போது இந்தச் சாமுத்திரிகாலட்சண நூல்களையும் சித்தர் வர்க்க நூல் வகையைச் சேர்ந்தனவாகவே கொள்ளவேண்டுமோ என்று தெரிகிறது.

இந்தத் தொகுப்பிலே புருஷலக்ஷணம், ஸ்திரீலக்ஷணம் ஆகிய இரண்டுக்கும் தனித்தனியே உரையுடன் கூடிய செய்யுள் பகுதி ஒன்றும் உரைநடைப் பகுதி ஒன்றும் உள்ளன. இன்னும் செய்யுள் வடிவில் அமைந்த சர நூல் என்னும் நந்தி நூலும் இதில் அடங்கியிருக்கிறது. அதிலே உடலையும் அதன் உறுப்புகள் சிலவற்றையும் கயிறு கொண்டு அளப்பதற்கான விதிகள் உள்ளன; இன்னும் சாமுத்திரிகா லக்ஷண விவரங்கள் சிலவற்றோடு, சாதாரணமாக ரேகை சாஸ்திர நூல்களில் காணும் விஷயங்களும் அடங்கியுள்ளன. உண்மையில் ரேகை சாஸ்திரம் சாமுத்திரிகா லக்ஷணத்தில் அடங்கியதே. அதனால் சாமுத்திரிகா லக்ஷண நூல்களில் ரேகைகளைப் பற்றிய விவரங்களும் காணப்படுவதே. பின்னால் அது தனிப் பிரிவாகப் பிரிந்ததாயினும் கைகளின் லக்ஷணங்களும் அதிலே இடம் பெற்றிருக்கும்.

இன்னும் இந்தத் தொகுப்பிலே இரண்டு பிற்சேர்க்கைகள் உள்ளன. அதிவீரராமபாண்டியன் இயற்றிய காசி காண்டத்தில் மகளிர் இலக்கணம் எனப் பெயரிய முப்பத்தேழாம் அத்தியாயம் ஒன்று. தனி நூல் போலவே வழங்கப் பெறும் அது பொழிப்புரையுடன் கொடுக்கப்பட்டுள்ளது. வராஹமிஹிரர் எழுதிய பிருஹத் ஸம்ஹிதையில் காணும் புருஷலக்ஷணம் ஸ்திரீலக்ஷணம் ஆகிய இரண்டு அத்தியாயங்களின் தமிழ்மொழி பெயர்ப்பு மற்றொன்று.

இந்தப் பதிப்புக்கு ஆதாரமாக இந்நிலையத்தின் சுவடிகளுள் பின்வருபவை உபயோகிக்கப் பெற்றுள்ளன:

புருஷலக்ஷணம்,

செய்யுள் பகுதி—ஆர் 4386, ஆர் 2707, டி 2026 ஆர் 1800.
உரைநடைப் பகுதி—டி 2027, ஆர் 1800, ஆர் 3665.

ஸ்திரீலக்ஷணம்:

செய்யுள் பகுதி, ஆர் 1799, டி, 2027,
உரை நடைப்பகுதி, ஆர் 238, ஆர் 4791, ஆர் 3665, ஆர் 1799.

நந்தி நூல்:

ஆர் 924, ஆர் 1800.
மகளிர் இலக்கணம் (பிற்சேர்க்கை I) ஆர் 2706.

இவை தவிர, ஸ்திரீ புருஷலக்ஷணங்களின் உரைநடைப்பகுதிக்கான ஓலைச்சுவடி ஒன்றும் நந்தி நூலுக்கான சுவடி ஒன்றும் சென்னை புரொகிரஸிவ் யூனியன் ஹைஸ்கூல் ஸம்ஸ்கிருத பண்டிதர் ஸ்ரீ ஈ. எஸ். நரஸிம்ஹாசாரியார் அவர்களுடைய உதவியால் ஒப்பிட்டுப் பார்ப்பதற்குக் கிடைத்தன. எனினும் சுவடிகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் குறைபாடு உள்ளதாகவே இருந்தது.

சாமுத்திரிகா லக்ஷணங்களின் செய்யுட்பகுதி பெரும்பாலும் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தப்பாவினால் ஆயது. வேறுபாவினங்களில் அமைந்த செய்யுள்களும் சில உள்ளன. அவற்றுள் பல சந்தர்ப்பத்துக்கு ஏற்றனவாகவும் இல்லை; இன்னும் சில அந்த உருவத்திலோ அல்லது திரிந்த வடிவத்திலோ நந்தி நூலிலும் காணப்படுகின்றன.

நந்திநூலும் ஆசிரியப்பாவினால் ஆனதே. எனினும் எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தமே அதிகம். வேறு வகைகளும் உண்டு. அதன் ஆரம்பப் பகுதி அந்தாதி முறையில், அதாவது முன் செய்யுளின் ஈற்றுப் பகுதி அடுத்த செய்யுளின் ஆரம்பமாகும் முறையில், அமைக்கப்பட்டுள்ளது. நடுவிலும் சில இடங்களில் இம்முறை காணப்படுகிறது. பல இடங்களில் இது காணப்படவில்லை. இதைக் கவனித்தால் ஒன்று அந்தச் செய்யுட்கள் முறை பிறழ்ந்து இருத்தல் வேண்டும்; அல்லது வேறு ஏதோ நூலிலிருந்து எடுக்கப்பட்டனவாக இருத்தல் வேண்டும். இன்னும் எடுத்த விஷயத்துக்குப் பொருத்தம் இல்லாமல் காமசாஸ்திர நூற்களிலே காணக்கூடிய செய்யுள்கள் இரண்டு மூன்றும் சேர்ந்திருந்தன. அந்தச் செய்யுள்களை இவ்விடம் கொடுக்கவில்லை. செய்யுள்கள் சில இடங்களில் சரியான பாடத்தை நிர்ணயிக்க முடியாதபடி மிகவும் சிதைந்த உருவத்தில் காணப்பட்டன. அவற்றை அந்த அந்த இடங்களில் கீழ்க் குறிப்புகளில் காட்டியிருக்கிறேன். செய்யுள்களின் சரியான வடிவை அமைப்பதற்குச் சென்னை 'கலைமகள்' ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன், எம். ஏ., அவர்கள் உதவி செய்தார்.

உரைநடைப் பகுதி கொண்ட ஏடுகளில் ஒவ்வொன்றிலும் சில பாகங்கள் விடுபட்டுப்போயிருந்தன. ஒரே மாதிரியான சொற்கள் திரும்பத் திரும்ப வருவதே இவ்விதம் விடுபட்டுப்போனதற்குக் காரணம்போலும். ஒன்றில் காணப்படுவது மற்றொன்றில் இல்லை. அவ்விதம் அந்த அந்த ஏடுகளில் காணும் பகுதிகளை ஒன்றுசேர்த்தே இந்தப் பாடம் அமைக்கப்பட்டது. அப்படியும் சில இடங்களில் குறை பூர்த்தி செய்யப்படவில்லை.

இந்தப் பதிப்புக்கு உதவி அளித்த ஸ்ரீமான்கள் ஈ. எஸ். நரஸிம்ஹாசாரியார், கி. வா. ஜகந்நாதன் ஆகியவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். அதனோடு இந்த நூலைப் பதிப்பிக்கும் பொறுப்பை எனக்கு அளித்து, அதற்கு வேண்டிய வசதிகள் பலவற்றையும் செய்து கொடுத்து, இடையில் திடீரென்று எதிர்பாராத வகையில் என்னுடைய உடல்நிலை கெட்டதால் ஏற்பட்ட அசாதாரணமான காலதாமதத்தையும் பொறுத்து, இந்நூல் நல்ல முறையில் வெளிவருவதற்கு உதவிசெய்த இந்த நிலயத்து அதிபர் ஸ்ரீ கி. சந்திரசேகரன், எம்.ஏ.,எல்.டி. அவர்களுக்கும் நன்றிசெலுத்த நான் கடமைப்பட்டுள்ளேன்.

தி. நா. சுப்பிரமணியன்.

## PHYSIOGNOMY OF MAN.

Every man will have thirty-two signs or characteristics.

Five organs of his body should be long and these are the eyes, hands, cheeks (or alternatively, according to another version, the ears), knees and the nose.

Five others which should be soft are the hair, fingers, nail, skin and tooth.

Six places should be lofty or elevated (high): these are the forehead, shoulders, belly or paunch, arm-pits, chest and back of the palm.

Seven places should be red and they are the soles of the feet, palms, corners of the eyes, tongue (or alternatively, uvula or prepuce as variants), nails, lips and palate or roof of the mouth.

Three places which are to be broad are the hip (alternatively, the testicle according to another version), chest and the forehead.

Three others are to be thin, viz., the neck, portion below the knee (shank) and the *membrum virile.*

Three other places should be low or depressed and these are the navel, the joints and the knuckles. (These three are variantly given as the middle of the chest, the lower half of the forehead and the joints.)

One possessing all these thirty-two will rule the world under one umbrella.

The characteristic features of the several parts of body and the resultant effects indicated thereby are as follows :—

### HEAD.

The head of a person should be round and proportionate. If it is round and big he will have wealth; if round and small he will have beauty and riches. If it is elongated he will have poverty. (According to another authority if the head is long and if the skull is broad, he will have long life.) Poverty is indicated if the skull-bone is not even on both the sides. If it appears as a double-head with a dent in the middle he will not have wealth and his mind will be bent on sinful actions.

### Hair on the head.

The hair on the head should be black, soft, long, dense, and of uniform growth with the end unsplit and this indicates royalty. If it is short, rought, sparse, not of uniform growth, brown in colour or with split end he will have to endure extreme poverty If the hair is long he will have greatness and dignity; if thick and black he will have wealth; and if thick and brown, poverty. Dense hair-growth indicates long life. If the hair is short and red he will be lascivious; if curly, he will be not only libidinous but also have stealthy goings; and if too long he will have to endure too much of reproach and slander. Split end indicates heavy expenditure and that, even if wealthy, he will not have enjoyable diet. If the hair resembles that of a cat (or an elephant according to a variant reading) he will suffer ill-health, but have wealth.

this is also considered ill-omened. It is considered bad if the forehead is small, crooked, uneven or with a depression in the middle and he will have poverty.

Five lines on the forhead indicate that he will live for a hundred years; four lines, eighty years; three lines sixty years; two lines forty years; and only a single line, his life will be very short for twenty years.

A nerve or vein running up across the forehead in the middle like a chord indicates that he will be a king, lord over hundred persons or a commander. If two such are seen he will be a person of noble character, and if there are many he will have to endure disease and poverty.

*Profuse hair (down) on the forehead indicates that he will be highly deceitful and if it is devoid of hair he will have greatness.*

### Eyebrow.

The eyebrows should be even, arched, equal to one another without joining in the middle and tapering at the outer ends with the hair soft, black and following the course. Such a person will be the ruler of the world. Thick hair indicates the strength. It is considered bad if the brows are very thick, slender, crooked, brown in colour or with breaks in the middle and poverty will attend such person. If it is a very small he will have to endure sorrow. If the brow has a dent in the middle he will have connection with forbidden women. The brows joined in the middle indicate the death of father, mother and uncle or father-in-law. If the hairs face down he will have ill-health.

### Eyelid.

Both the eyelids should be uniform with eyelashes dense and black. This bestows beauty and wealth on the person. If one is big and the other small, he will have ill-health.

### Eye.

The eyes should be broad, *equal to one another, placed* on the same level, the apple of the eye dark with the *portion surrounding* it white having red streaks and the corners red like the *Lōvai* fruit. Such a person will be ruler of the world. If the apple of the eye is small he will have long life and if it is deep dark in colour he will embrce many women. A squint eye indicates that

he will have poverty and will also be a liar, while a blinking eye, that he will embrace many women. It is considered bad if the eyes are brown, deep red, sunken or with too much of intervening space or if they are staring or goggle eyes. If they are like the petals of a lotus he will have many riches and if they resemble red water-lily he will be a second Rama, i.e., a hero. If the eye resembles that of a cat he will run after others' wives and if it resembles that of an elephant he will have vast riches. Those resembling the eyes of a snake, tiger or fowl are bad Congenital blindness indicates that he is a sinner and will have to endure heavy sorrow, while blindness without any defect in the eye, i.e., *amaurosis*, perverted intelligence of a high degree. If the eye has the colour of honey, he will be highly lascivious and also deceitful; and if white he will be deceitful and also be an adept in the art of (prognostication) looking at the magic black pigment (i.e.), a crystal-glazer. (According to another verse if the eye is white in colour he will be a scholar, poet or artist.) A freckle in the white portion of the right eye indicates that he will have a sharp intelligence, while that in the left eye indicates that he will be lascivious and enjoy women always A mole of the colour of honey in the eye denotes prosperity.

### FACE.

The face should be round, proportionate and beautiful. This is considered best. If it is small he will have beauty. If it is broad and like that of a lion, he will have riches and also be a ruler of the world. Very small, crooked or square faces are considered bad.

### FACIAL HAIR.

If the facial hair of a person is black and thick he will have riches and if soft, beauty. If it is red (i.e., brown) he will be deceitful. Curly hair indicates that he will speak effectively and that his words will prevail. If the hair-pores are close, he will be highly lascivious. Sparse hair in the face indicates that he will have early orgasm.

### CHEEK.

The cheeks should be round, even and fleshy. If it is long he will be deceitful (or very rich according to a different reading). It is considered good if it appears as single (and not divided) and

he will be wealthy. An elevated cheek is good and if it has too much of flesh he will have wealth and also good enjoyment. Sunken, emaciated or dried up cheek indicates that he will have distress. A clockwise whorl on both the cheeks indicates that he will speak effectively and that his words will prevail, while a counter-clockwise one, that he will have to endure poverty.

NOSE.

The nose should be elevated, of four finger-breadths by his own hand, broad at the lower end and tapering upwards, the nostrils small and both the sides symmetrical with the tip like the flower of *kumil* (*kamilampū*). Such a person will rule the earth. If it is of three finger-breadths in length he will have riches and also long life and beauty. A nose too long indicates that he will take a long time to reach orgasm while a short one, the reverse. If it is big he will have wealth and if there is a depression in the middle he will be deceitful and poor. If one side is big and the other small he will have ill-health. If the tip of the nose is curved like the beak of a parrot he will be a ruler, strong and intelligent.

A freckle in the centre at the tip of the nose indicates that he will commit adultery, while one on the right side that he will have riches and on the left side, poverty. A congenital scar or mark on the nose indicates that he will rule over the world.

MOUTH.

A small mouth red in colour is considered best. A small mouth indicates riches while the red colour beauty. The broad one indicates the tenacity of the person. If the mouth is black he will be deceitful and if it is very black he will have distress.

If there are marks of a discus (*chakra*) and conch (*śankha*) on both sides (inside) the mouth he will be ruler of the world. If the marks of *svetai* (? *svetaka*—wood-aple fruit; or a creeper) are found he will have wisdom. If there are marks of a lotus, he will be a scholar; those of a pair of fly-whisks, long life and beauty; an elephant goad indicates victory, while an umbrella, riches and also kingship. The mark of a snake indicates poverty and deceit.

LIP.

Small lips indicate beauty and wealth. He will have vast riches, if it resembles the lotus petal.

### TOOTH.

The teeth, thirty-two in number, should be small resembling the bud of *mullai* plant, polished and white in colour, uniform and evenly set without gaps Such a person will have vast riches and beauty. If the teeth are big he will have to endure poverty and the riches, if any, already possessed will be squandered. If the teeth are separate with gap intervening each, he will be highly lascivious and will reach orgasm before his partner attains it. Snagged teeth indicate scholarship which will be lost while carious ones disease. If they are brown in colour he will have to endure mental pain and suffering. A small tooth in the middle of either the upper or the lower row indicates that he will have wealth and progeny and also sharp intellect.

### TONGUE.

The tongue should be thin, long and red. Thick, broad or rough ones or of brown colour are considered bad. A black tongue indicates poverty.

### VOICE.

A hard harsh voice indicates the irascibility of the person and also his cunningness, while a soft one his cunningness but also of his favourable disposition If the tone is low he will be deceitful and also ungrateful.

It is also said that that if the voice resembles the rumbling of clouds, roar of an elephant or lion, beating of the drum, trumpet or a musical instrument, he will have wealth and also be a commander of great valour

Congenital blindness indicates that he is a sinner (in previous births).

When laughing if the face appears beautiful, he will have wealth and if not beautiful, no wealth, but poverty

### EAR.

The ears should be uniform and placed on the same level. They should be long, hanging, soft and with a good twist. If the outer ear is broad he will have quick temper and if it is turned or bent inside he will be deceitful; if small it indicates poverty. If the inner ear, i.e., the opening, is small he will have riches and if broad poverty. If the inner ear is formed with a clockwise twist

he will be ruler of the world. If the ear is hirsute, having thick dark hair with pores closely situated and also pointing upwards he will be strong and valiant. If the hairs point downwards he will have poverty, sorrow and affliction.

### Chin.

If the chin is thick and divided into two, he will be cunning and if it is single he will have riches. A clockwise whorl on the chin indicates that he will have good food and enjoyment, while a counter-clockwise one indicates poverty. If the whorl is clockwise and situated underneath the chin he will have good food. A counter-clockwise whorl on the left side indicates that his head will become separate, i.e., decapitated while one on the right side indicates that he will have wealth for some days and poverty for some days. A clockwise one on the right side denotes that he will be ruler of the world. If there are clockwise whorls on both the sides he will rule the world and if they are counter-clockwise he will suffer from disease and poverty.

### Neck.

The neck should be thick, round, having the shape of a conch, with the veins not perceptible (when singing) and of four finger-breadths measured by his own hand in height. Such a person will have long life, wealth, beauty and kingship. If the veins are visible and knotty (thick) he will have distress If the neck is too long, he will have poverty and also be deceitful; and if too short, what he thinks will not be accomplished. A thick neck indicates wealth. Necks resembling those of a camel, donkey and the like are bad.

If there are four lines in the neck, he will have long life and prosperity and if three lines, beauty and long life. Two lines in the neck indicate that he will be deceitful, but also be sole enjoyer. If there is only one line or fold in the neck whatever he thinks will not be accomplished. If no line is seen in the neck, he will have mental pain and distress (or wealth according to a variant reading). Hair in the neck indicates short life.

### Nape.

If there are two lines or folds in the nape he will enjoy good food. If the nape is high he will have riches and if low (or dried up according to a variant reading) poverty. A whorl on the nape is considered bad.

### Shoulders.

The shoulders should be broad, strong and slightly curved. If both the shoulders are high he will have riches and if low long life. If both of them are equal to one another he will have wisdom. If both are hirsute whatever he thinks will not be accomplished.

### Arm-pit.

The arm-pit should be elevated, plump, with the hair short and black and without any bad odour. Such a person will be ruler of the world. If the odour is bad resembling the smell of aloe he will be highly lascivious. If it is like the odour of slaked lime he will have distress. Pungent odour like that of the urine of an elephant indicates that he will reach orgasm easily, while that of coconut-water the opposite, i.e., that he will take a long time. If the odour is like that of a lotus flower many women will always surround him. If the hair is red, dense and low he will be a vagabond due to poverty and if there is no hair he will reach orgasm very quickly and easily.

### Arm.

The arms should be long and descend below the knee. Such a person will have vast riches, long life and kingship. If they reach the knee-bend he will have wealth If they descend only up to the level of one finger-breadth above the knee, he will have good food; if up to two finger-breadths, his words will prevail; three finger-breadths he will have long life and beauty; and four finger-breadths meagre wealth. If they stop at five finger-breadths or more above the knee, he will have poverty and suffering and will also be deceitful.

If the arms are soft, round and moderately thick he will have long life and beauty If they are too thick he will have mental pain and grief; and if short, distress.

If the upper-arm from the elbow to the shoulder is without hair he will have beauty and if hirsute distress.

### Elbow (forearm).

If the elbow is too thick he will have wealth and also deceit, and if very thin poverty If the hair on the forearm is short and black he will enjoy woman always If it is red or brown in colour

he will have poverty and if thick strength. If the joints are deep he will have wealth. If the bones are prominent he will have affliction and if the veins are prominent he will have poverty, grief and suffering. A clockwise whorl either in the elbow joint or in the forearm indicates that he will be generous while a counterclockwise one there miserliness.

### Wrist.

Three lines or folds, known as *yavāmāl* 'garland of barley-grains', are to be seen at the wrist. Such a person will have wealth and kingship. If these are seen on the backside also, thus completing the circle, he will have wealth, beauty, kingship, intellect and progeny. If only two are found he will have good mind and a single one, wealth of grains.

The joint should be well fixed without the bones being perceptible and easily flexible. If the joints are weak or small he will become wounded and if they are loose, he will have poverty.

### Back of the Palm.

The back of the palm should be soft and elevated (plump). He will have wealth. If the veins are prominent he will have poverty and if hirsute he will not have compassion and will not give anything in charity.

### Palm.

The palm should be like that of a monkey, i.e., with the fingers closely knitted and the palm depressed hollow. Such a person will have vast riches. If the palm is elevated without being sunk he will give away his wealth. The palm should be red and it indicates wealth. If it is brown or yellow he will embrace forbidden women.

A smoky palm indicates that he well earn his livelihood committing sinful deeds and that he will also be stealthy. If it is small or crooked he will do low action. Rough and uneven palms are also bad.

### Palm-lines.

One should not have too many lines on the palm and those visible should be thin and red. Such a person will have wealth, long life and kingship. If they are red and long he will be considered as the God of Love (*Manmatha*) to women and will enjoy

all the pleasures of life; but if they are broken he will have misery. Thick lines also indicate misery. If they are dim and broken he will lose his wealth, and if they are thick and smoky he will be unlucky and a great sinner.

Among the lines on the right palm if there appears the mark of a conch (*śaṅkha*) or discuss (*chakra*) he will always be receiving money and also giving it away; the sign of a fish, he will have vast riches, but close fisted. An umbrella indicates generosity; kettle-drum (*damaruka*) glory and vast riches with close fist; a moon (*chandra*) scholarship; sword, valour; water-pot (*kumbha*) greatness; fly-whisk (*chauri*) life surrounded by many persons; lotus flower, that the Goddess of Prosperity, Lakshmi, will be staying with him for ever: The mark of a garland indicates that he will enjoy carnal pleasures throughout; a spear, victory; *Liṅga* devotion to Lord Siva and a religious-mind, and a bull (*rishabha*) indicates that he will enjoy vehicular conveyances. The sign of a *makara* indicates that he will be a monarch with prosperity and progeny.

The signs of the river Gangā, elephant, flag, circular ear-ring (*kundala*), ocean, fly-whisk (*chāmara*), *vimāna* kettle-drum, *tōrana*, umbrella, conch, trumpet, creeper, elephant goad (*aṅkuśa*), battle-axe (*maḻu*), crescent moon, conch, discus, lotus flower, spear *vēl*), *makara*, garland, *pārijata* flower, *muraśu* drum, pot and the like are all considered as indicating royalty. It is also said that royal persons will have one or more of these signs on their palms, soles or inside their mouths.

If there is a line without any break from the middle of the wrist to the tip of the middle finger he will have great wisdom and will be a philosopher; and if it stops at the base of the middle finger he will be a scholar (and also the possessor of vast riches and land according ot another authority). If that line reaches the base of the little finger he will have wealth (and enjoy kingship and choice gathering of women according to another authority). If it reaches the base of the ring finger he will wear ornaments; but will also have mental suffering. (Another authority says that he will be king and the treasures known as *śaṅkha-nidhi and padma-nidhi* will reside with him.) If it reaches the base of the index finger he will be lascivious and also commit adultery; and of the thumb enjoyment of many women and that his words will

prevail. If such a line stops in the middle of the palm he will have wealth and progeny. If that line after stopping in the middle of the palm, branches off into three lines each reaching the base of the middle finger, ring finger and little finger respectively, he will have twin treasures *śaṅkha nidhi* and *padma nidhi*; and if it branches into two he will have vast riches or be a religious head, adept in all the arts. If this line is absent he will be a lame person (or a fool according to a variant reading).

If there is one line below the little finger at the edge of the palm he will have one marriage; two lines two marriages; likewise up to five; beyond that these lines indicate only concubines and not married wives.

Similar lines below the thumb indicate sons, progeny.

The line of wisdom, if it reaches the base of the middle finger, indicates wisdom and if it reaches the base of the thumb, riches with twin treasures in addition.

If the line starting below the little finger reaches the base of the index finger (or the thumb according to one authority) he will live for hundred years and will also have wealth. If it reaches the base of the middle finger he will live for eighty years; the ring finger fifty years; if it does not go beyond the little finger his life will be only twenty years.

If the lower joint of the thumb has the line like a chain he will not be married up to his fortieth year, but will have two wives after that and six children.

## Fingers.

The fingers, when stretched, should be even on the same level with no gaps between them. Gaps, if any, indicate that whatever he earns will be spent and that he will not have any savings. If the middle finger is not on the level but lower he will not have any patrimony.

The fingers should be long, thin and straight. If long, he will have long life and if thin, beauty and wealth in addition. Thick fingers indicate poverty and stealthiness while short ones slavery; crooked fingers are bad and straight ones indicate prosperity. Six fingers in the right hand indicate vast riches while in the left hand affliction and grief.

வான்; பழிச்சொல் பெறுவான். வயிறு குளிர்ந்திருந்தால் வாத முதலான வியாதியே அடைவான். வயிறு வெதும்பி இருந்தால் பித்த சரீரமாய் வெகு காமியாவான். வயிறு உலர்ந்திருந்தால்[1] மூலாக்கினி அதிகமாம். தொந்தி வட்டமானால் வியாதி. வயிறு குறுக்கே நீண்டிருந்தால் மலடனாவான். தொந்தி மேலே அஞ்சு மடிப்பு இருந்தால் இரக்க முள்ளவனாவான். நாலு மடிப்பானால் யாவரிடத்திலும் பகையுண்டு. மூன்று மடிப்பானால் அறிவுண்டு. இரண்டு மடிப்பானால் வெற்றியுண்டாம். ஒரு மடிப்பானால் சுக போசனமில்லை. ஒரு மடிப்புமில்லாவிட்டால் அலைந்து திரிவான்.

## தொப்புள்.

தொப்புளுக்கு நாற்புறத்து மயிரும் தொப்புளைப் பார்த்திருந்தால்[2] செல்வமுண்டு. நாபி வலஞ்சுழியாயிருந்தால் அரசாளுவான். இடஞ்சுழியா யிருந்தால் வறுமையாவன். ஆழமா யிருந்தால் குணமுண்டு. உயரமாயிருந்தால் திரவியங்கள் உண்டு.[3] கீழ்நோக்கி நீண்டிருந்தால் வெகு பசியுண்டு.

## விலா.

விலாப்பக்கம் நரம்பும் மயிரும் எழாமலிருந்தால் செல்வமுண்டு. நரம்பும் மயிரும் உண்டானால் வறுமையுண்டு. வலது விலாவிலே வலஞ்சுழியாயிருந்தால் ஸ்திரீபோகம் மிகுதியாயுண்டாம்; இடஞ்சுழியானால் வியாதியாவான்[4] அல்லது பெண்டிழப்பான். இடது விலாவிலே வலஞ்சுழி யிருந்தால் இகழப்படுவான். இடது விலாவில் இடஞ்சுழியிருந்தால் கீர்த்தி பெறுவான்.

## முதுகு.

முதுகிலே மயிர் மிகுதியானால் ஈனனாவான். மயிர் கொஞ்சமானால் பயங்கொள்ளி. மயிர் இல்லாமல் இருந்தால்[5] அழகுண்டு. முதுகு ஒன்றானால்[6] புத்தி மந்தனாவான். நடுவில் தாழ்ந்து முதுகு இரண்டானால் அழகும் ஆயுசும் வெற்றியும் உடையவன். முதுகு நடுவில் ஒரு வலம் புரிச் சுழியானால் ஆயுசுண்டு. இடம் புரியானால் பாவியாவான். இரண்டு சுழி வலம் புரியானால் வெற்றியுண்டாம். இரண்டு சுழி இடம் புரியானால் காமவிகாரியாவான். ஒன்று வலஞ்சுழியும் ஒன்று இடஞ் சுழியுமானால் உலக மெல்லாந் திரிவான். மூன்று முதலாகப் பல சுழியிருந்தால் மிகுதியும் வறுமையுண்டு. ஒரு சுழியுமில்லாவிட்டால் மட்டனாவான்.

## லிங்கம்

ஆண்குறி அவரவர் கையினாலே ஆறு அங்குலமானால் அழகும் செல்வமு முண்டு. ஏழு அங்குலமானால் அரசாளுவான். எட்டு அங்குலமானால் தீர்க்காயுசுண்டு. ஒன்பது அங்குலமானால் வித்தையுண்டு. பத்து அங்குலமானால்

(பா—ம்.)—[1] சிறுத்திருந்தால்.
[2] மடித்திருந்தால்.
[3] உயர [illegible] மேலே [illegible]; [4] வேறொருவ.
[illegible]
[5] வீர்த்தி அதிகமும் தேஜஸும் உடையவன்.
[6] மிருதியானால்

### குதிக்கால்.

குதியானது பந்துபோலே இருந்தால் உலகாளவான். வலது குதியிலே மறு விருந்தால் திரவியவானுவான். இடது குதியிலே மறுவிருந்தால் கபடனுவான்.

### புறங்கால்.

புறங்கால் ஆமை முதுகு போலேயும் பொஸ்தகம்போலேயும் நடுவே உயர்ந்து மயிர் கறுத்துச் சிறுத்து அற்பமாயிருந்தால் உலகாளவான். படம் போல் பதிந்திருந்தால் குரு ஆவான், அல்லது அரசனுவான். மயிரில்லா திருந்தால் வறுமை யுண்டு. புறங்காலின் வலத்தில் வலஞ்சுழியிருந்தால் செல்வ முண்டு. இடத்தில் இடஞ்சுழியிருந்தால் (ஆம் என்ற வார்த்தை) ஆ மென்பதை அல்லவென்பான். மாறுனுல் வல்லாண்மையுண்டு[1]. வலத் திலே மறு விருந்தால் தொடுத்தது முடியும். இடத்தில் மறு விருந்தால் நினைத்தது முடியாது.

### உள்ளங்கால்.

உள்ளங்கால் மிருதுவாய்ச் சிவந்துஇருந்தால் அற்ப காரியத்துக்கும் அருசுவான். நடுவே குறுக்கே எறும்புபோக இல்லாமல் நல்ல ரேகை உண்டானுலும் உலகாள்வான். உள்ளங்கால் நிலத்திலே பதிந்திருந்தால் செல்வம். கடினமானுல் துன்பம். மிருதுவானுல் உலகாள்வான். வலப்புறத் திலே மறுவிருந்தால் ஆயுசுண்டு. இடப்புறத்திலே உள்ளங்காலில் மறு விருந்தால் அலைச்சலுண்டு.

### உள்ளங்கால் ரேகை.

உள்ளங்காலில் சங்கு சக்கரம் இருந்தால் உலகாளவான். தாமரைப்பூ போலே ஒரு ரேகையிருந்தால் வித்தையுண்டு. குடைபோல் இருந்தால் நன்மை. கொடிபோல இருந்தால் ஆயுசு விருத்தி. யாளிபோலே இருந் தால் வெகு செல்வமுண்டு. மாலைபோலே ரேகையிருந்தால் வெகு செல்வம்.[2] தமருகம் போலிருந்தால் வெல்லுமசொல்லை யுடையவன். கும்பம் இருந் தால் பலம் உண்டு. மத்தளம் போலிருந்தால் கீர்த்தியுண்டாம். வாள் போலேயானுல் பலனுண்டு; தீரனுவான்.[3] சாமரைபோல ரேகையிருந்தால் பெண் போகம் தினமுமுண்டு. சந்திரன் போலேயிருந்தால் புத்தியுண்டு. மச்சம் போலிருந்தால் திரவியமுண்டு. சிவந்திருந்தால் செல்வமுண்டு. கறுத்திருந்தால் வறுமையுண்டு.

குதிக்கால் தொடுத்து ஒரு ரேகை நுனி விரல் மட்டும் நடுவில் அறுதிருந் தால் அவன் மிதித்த இடமெல்லாம் செல்வமேயாகும். குறுக்கே ஒரு ரேகையும் நெடுக்கே ஒரு ரேகையும் புள்ளடிபோலே யிருந்தால் மிதித்த இடமெல்லாம் குட்டிச் சுவராயப் போய் விடும். இரண்டு புள்ளடி போலே யிருந்தால் அவன் முகத்திலே விழிக்க ஒண்ணுது. கட்டில் போலே நாலு ரேகை யிருந்தால் வெகு சனங்களை ரக்ஷிப்பான்.

---

(பா-ம்.) [1] வறுமை. [2] யானைபோலே. [3] யோகியாவான். [4] திரவியனுவான்.

பாயாயிருந்தால் வறுமையுண்டு. வலது பீசத்திலே மறு விருந்தால் பிறர் மனையாளை சேர்வான். இடது பீசத்திலே மறு விருந்தால் பெண்ணாசை யில்லை. சமானமாய இரண்டும் பருத்துச் சரியொத்திருந்தாலும் மயிர் சிறுத்து அறபமாயிருந்தாலும் உலகாளவான. மயிர் பருத்து நெருங்கி யிருந்தால் செல்வ முண்டு. உலர்ந்து சிறுத்தால் வறுமையுண்டு.

சகனம் (கடிதடம்).

வலது சகனத்தில் வலஞ்சுழியிருநதால் வெற்றியுண்டு. இடது சகனத்திலே இடஞ்சுழி யிருந்தால் ஆயுளுண்டு. மாறுனல் மிடியும வியாதியும் உண்டு. வலது சகனத்திலே மறு விருநதால இருககுமிடததில் இருந்து செல்வம் அனுபவிப்பான. வடுவிருநதால் பலன ஒககும.

தொடை.

தொடை இரணடும உருணடு இருநது மயிர் சிறுத்துக் கறுத்துச் சுருண்டு அறபமாயிருந்தால் செல்வமும ஆயுசும அரசும உண்டு. மயிர சிவந்தால் மிடியுணடு. மயிர் பருத்தால் விகாரியாவான. நெருங்கியிருநதால் கபடனு வான். மயிர் நுனி பிளநதிருந்தால் வறுமை யுணடு. மயிர் இல்லாவிட்டால் அறப போகியாவான. வலது தொடையிலே மறு விருநதால நனமையுடையவ னுவான. இடது தொடையிலே மறு விருநதால தீமையுடையவன. வலது புறத்திலே வலஞ்சுழியாயி ருநதால உலகாளவான இடது புறததிலே இடஞ் சுழியா யிருநதால் செலவமுணடு மாறுனால அலைநதுதிரிவான.

முழங்கால்.

முழஙகால் வடடமானுல அழகுணடு நீணடிருந்தால வறுமையுணடு. தாழந்திருந்தால் செல்வமுண்டு உயர்நதிருந்தால் வறுமை, வியாதி. முழங்காலிலே மயிர் மிகுதியானுல் உலைச்சல்[1] உண்டு. வலத்திலே வலஞ்சுழி யானுல் சுகமுணடு. இடததிலே இடஞ்சுழியானுல அநேகம் பெண்கள்[2] வணஙகுவாாகள. மாறுனுல் மாதா பிதா மரணம.

கணைக்கால்.

கணைக்கால் வரால மீன போலே யிருநதால உலகாளவான. மயிர் சிறுத்துக் கறுதது அறபமானுல் செல்வமுணடு. மயிர் பருதது நெருங்கி யிருந்தால் காம விகாரியாவான. வலததிலே வலஞ்சுழியாயிருந்தால் திரவியமுண்டு. இடததிலே இடஞ்சுழியாயிருநதால வெறறி யுணடு. சிவந திருந்தால் கிலேசமுணடு, நுனி மயிர் பிளந்திருந்தால் அலைச்சலுணடு. வலததிலே மறு விருநதால அழகுணடு. இடததிலே மறு விருந்தால மிடியுண்டு.[3]

பரடு.

கறடு தராசுத் தட்டுபபோலே இருந்தால் உலகாளவான ; நீண்டிருந்தால் அலைச்சல் உணடு பருத்திருந்தால் காமவிகாரம். நரமபு கணடால் வறுமை. மயிர் கணடால மாதா பிதா மரணம். மறு விருந்தால் பிதா மரணம்.

(பா-ம்.) [1] அலைசசல். [2] பேர். [3] வலிமையுணடு.

இருந்தாலும் வலது பக்கத்திலிருந்தாலும், பெண் போகத்தில் எந்நேரமும் மனசாயிருப்பான். இடது பக்கத்தில் மறு விருந்தால் பெண்பேரில் மனசு இல்லாமலிருப்பான் ; ஞானம் உள்ளவனுக இருப்பான்.

முதுகு நடுவிலே மறு விருந்தால் உலகையாள்வான். வலது புறத்தில் மறு விருந்தால் செல்வமுண்டு. இடது புறத்திலிருந்தால் வறுமையுண்டு. இடது விலாவிலே மறு விருந்தால் போகமில்லை. வலது விலாவிலே மறு விருந்தால் வெகு போகமுண்டு.

வலது புறம் தொப்புளில் மறு விருந்தால் வெற்றியுண்டு. இடதுபுறம் தொப்புளில் இருந்தால் சோறு கிடையாது. நடுத் தொப்புளிலே மறு விருந்தால் உலகாள்வான்.[1] வலது புறம் வயிற்றில் மறு விருந்தால் செல்வம். இடதுபுறம் வயிற்றிலே மறு விருந்தால் வயிற்றில் வியாதியுண்டு. நடுவயிறு மறுவானால் கபடியாவன்.

வலது மார்பில் மறு இருந்தால் உலகாள்வான் ; செல்வம். இடது மார்பில் மறு செல்வமும் பழியும் உண்டு. வலது முலையில் மறு இருந்தால் கூடின பெண் பிரியமாட்டாள். இடது முலையில் மறு சுகபோகன முண்டு ; போசனத்தில் வெறுப்பு. வலது தோளில் மறு வெகு செல்வமும் வெற்றியும் உண்டு. இடது தோள் மறு திரவியம் சேதமும்[2] பயமும் உண்டு. வலது முழங்கை மட்டும் உள்ள மறு வசீகரம் உண்டு. இடது முழங்கைமட்டும் உள்ள மறு பகை உண்டாகும். வலது முன்கை மறு செல்வம். இடது முன்கை மறு வலிமை. வலது உள்ளங்கை மறு விதரணம் உண்டு. இடது உள்ளங்கை மறு வறுமை.

வலக் கைப் பெருவிரலிலே மறு விருந்தால் ஞானமுண்டு. வலது சுட்டு விரலிலே மறு விருந்தால் அறிவுண்டு. வலது நடுவிரலிலே மறுவிருந்தால் தீர்க்காயுசுண்டு. அணி விரலிலே மறுவிருந்தால் பூஷணமுண்டு. சிறு விரலிலே மறு விருந்தால் புத்திரருண்டு.[3] இடதுகைப் பெரு விரலிலே மறு விருந்தால் பாவமுண்டு. சுட்டு விரலில் மறு விருந்தால் புத்தி மந்தமாம். நடுவிரலி லிருந்தால் அற்பாயுசு. அணிவிரலி லிருந்தால் வறுமையுண்டு. சிறுவிரலி லிருந்தால் மடையனுவான். வலது புறங்கையிலே மறு விருந்தால் பெருமையுண்டாம். இடது புறங்கையில் இருந்தால் கிலேசமுண்டு.

இடது அக்குளில் மறு விருந்தால் வெகு கபடனுவான்.[4] வலது அக்குளி லிருந்தால் விதரண முண்டு ; செல்வமுண்டு வலது கழுத்தில் மறு விருந்தால் எந் நேரமும் ஸ்திரீ போகமுண்டு. இடது கழுத்தி லிருந்தால் ஸதிரீ போகம் கட்டுப்பட்டுப்போம் ; உண்டானால் அற்பமாம்.

வலது கன்னத்தில் மறு விருந்தால் வெகு செல்வம் ; சம்பத்து உண்டு.[5] இடது கன்னத்திலிருந்தால் வறுமையுண்டு. இடது தாழ்வாயில் மறு விருந்தால் மனக்கிலேசம் உண்டு. வலது தாழ்வாயிலிருந்தால் பெண்போகமுண்டு. நடுத்தாழ்வாயில் மறுவிருந்தால் தீர்க்காயுசு உண்டு. கீழ் அதரம் வலது புறத்தில் மறு விருந்தால் சுகபோசனமுண்டு. இடதுபுறம் மறு பொசிப்புக்

(பா-ம்.) [1] வறுமை [2] செல்வமும் [3] நன்மையுண்டு. [4] கள்ளன் ஆவான். [5] அலைச்சல் உடையவன்.

### கால் விரல்.

இரண்டு கால் விரல்களும் பெருவிரல் தொடுத்து அஞ்சுவிரலும் ஒன்றுக் கொன்று குறைந்து சிறுத்திருந்தால் உலகாள்வான். பெருவிரல் குறுகி அடுத்த விரலும் நீண்டிருந்தால் சோரச் செலவு உண்டு. சிறு விரலும் அதுக்கு அடுத்த விரலும் நீண்டிருந்தால் பழியுடையவன். விரல்கள் நெருங்கியிருப்பவன் திரவியவானுவான்; அலக்கலக்காயிருந்தால் பணம் சேராது. வலது காலிலே ஆறு விரல் இருந்தால் வெகுசெல்வம். இடது காலிலே ஆறு விரல் இருந்தால் அலைச்சல். விரல்களிலே மயிர் நெருங்கி யிருந்தால் திரவியம் சேரும். விரல்கள் ஒன்றன்மேலொன்று குறைிலேறி னால் போலே இருந்தால் வறுமையாவான். பெருவிரலுக்கு அடுத்த விரல் மிகுதியும் நீண்டிருந்தால் வெகுபூஷணமுண்டு நடுவிரல் நீண்டால் வயது நூறுண்டு. விரல்கள் சுருண்டிருந்தால் செல்வமுண்டு. வலது கால் பெரு விரலிலே வலஞ்சுழியா யிருந்தால் உலகாளவான். இடஞ்சுழியா யிருந்தால் அலைந்துதிரிவான்.

### கால் விரலில் மறு.

வலதுகால் பெருவிரலிலே மறு விருந்தால் அரசனுவான். இடதுகால் பெருவிரலிலே மறு விருந்தால் செல்வம் உண்டு. மற்றவிரல்களில் மறு விருந்தால் வறுமை வலதுகால் பெருவிரலிலே மயிராதல் மறுவாதல் குமிழ் மறு வாதல் ஒத்தமறுவாதல் வலஞ்சுழியாதல் இருந்தால் உலகாளவன். இடஞ்சுழி இருந்தால் அதிக சம்பத்து உடையவனுவான [1]மற்ற விரல்களிலே வலஞ்சுழியாயிருந்தால் செல்வம். இடஞ்சுழியிருந்தால் பொருள் சேரும். இடதுகால் பெருவிரலிலே இடஞ்சுழி இருந்தால் தொடுத்த காரியம் முடியும். வலஞ்சுழி இருந்தால் ஊரிடத்திலே நடக்க வேண்டும் மற்ற விரல்களிலே இடஞ்சுழி இருந்தால் நினைத்தது முடியும். வலஞ்சுழியானால் காமவிகாரி யாவான். மூன்று வகை மறுக்களும் காலில் விரல்களிலே இருந்தால் செல்வமுண்டு.

### மறு (மச்சம்).

உள்ளங்காலிலே வலத்திலே நடுவே ஒரு மறுவிருந்தால் வயது நூறுண்டு. இடத்திலே இருந்தால் பாவம் பண்ணுவான்.[2] புறங்காலில் வலதில் நடுவே மறு விருந்தால் நினைத்தது முடியும். இடது புறங்காலில் நடுவே மறு விருந்தால் மிடியுண்டு; நினைத்த காரியம் முடியாது கணுக்காலில் வலத்தில் மறுவிருந்தால் அழகுண்டு. இடத்தில் மறு விருந்தால் மிடி யுண்டு. வலது முழங்காலிலே மறு விருந்தால் செல்வம். இடது முழங் காலிலே மறு விருந்தால் அலைச்சல்.

வலது தொடையில் மறு விருந்தால் நன்மை. இடது தொடையில் மறு விருந்தால் ஈனம். வலது சகனத்தில் மறுவிருந்தால் செல்வமுண்டு. இடது சகனத்தில் மறு விருந்தால் அலைச்சல் உண்டு; செல்வமுண்டு. வலது பீசத்தில் மறு விருந்தால் பிறர் மனை நோக்குவான். இடது பீசத்தில் மறு விருந்தால் பெண்ணாசையில்லை. கோசத்திலே மறு விருந்தால், நடுவாக

(பாடம்) [1] பெருவிரலுக்கு. [2] அலைவான். [3] நன்மை.

ஐம்பது வயது மட்டும் அளந்து பார்ப்பது. புருஷருக்குப் பதினாறு வயதுக்கு மேல் ஐம்பது வயது மட்டும் அளந்து பார்ப்பது.[1] லட்சணம் [அப்போது தான்] ஒத்திருக்கும். முன்னும் பின்னும் பார்க்கிற லட்சணம் ஒத்துவராது.

கால் பெருவிரலிலே தொடுத்து நெற்றியிலே மயிர்பற்றளவு கண்ட அளவினோடே அவரவர் மார்பிலே சுற்றிக் கண்ட அளவிலே நாலத்தொன்று கூட்டிக்கொண்டு அங்குலக் கணக்காக அவரவர் கையினாலே அளந்து பார்க்க நூற்றெட்டு அங்குலமானால் உலகமெல்லாம் ஒரு குடையின் கீழே ஆளுவான். ஏறினாலும் குறைந்தாலும் வேறே வேறே பலனுண்டு.

[இந்தப்பகுதி ஒரு பிரதியில் பின்வருமாறு காணப்படுகிறது :

காலில் தொட்டு நெற்றி மயிர் அளவு மட்டும் அளந்து அந்த அளவுடனே அந்தக் கயிற்றை அவன் மார்பு அகல மட்டுக்கும் அளந்து இரண்டும் ஒன்றாய்க் கூட்டி அவன் அங்குலத்திலே நூற்றெட்டு அங்குலமானால் உலக மெல்லாம் ஆளுவான். நூறு இருந்தால் மந்திரியாவான். தொண்ணூறு இருந்தால் உத்தமம். எண்பது அங்குல மிருந்தால் மத்திமம். எழுபத் தைந்து அங்குலமிருந்தால் ஏழையாவான். எழுபது இருந்தால் மகா தரித்திரன். அறுபத்தைந்து இருந்தால் பாவி யாவான். அறுபது இருந் தால் துரோகியாவான்.]

வலது கைவிரல்கள் ஐந்தையும் அளந்த கூட்டி முழங்கையில் வைத்து அளக்க நடுவிரல் நுனி மட்டும் வந்தால் உலகாளுவான். நடுவிரலின் மூன்றும் இறைமேலே வந்தால் மதி மந்திரியாவான். நடுவிரலின் நடுவே நின்றால் நன்மையுண்டாம் ; பாக்கியவனுவான். நடுவிரலின் அடியிலே வந்தால் அலைந்து திரிவான். உள்ளங்கையிலே வந்தால் முழு வறுமை யுண்டாம்.

வலது தோள் தொடுத்து வலதுகை நடுவிரல் நுனிமட்டும் கண்ட அளவை இரட்டித்துக் கால் பெருவிரல் தொடுத்த நெற்றி மட்டும் வந்தால் வயது நூறு இருப்பான் ; மிகுந்த செல்வ முண்டு. புருவத்தின் நடுவே வந்தால் வயது எண்பது; செல்வமுண்டு. மூக்கிலே வந்தால் எழுபதுவயது இருப்பான்; இரக்கமுமுண்டு. வாய் மட்டுக்கும் வந்தால் வயது அறுபது இருப்பான் ; சொற்பமான போக முண்டு. கழுத்து மட்டும் வந்தால் வயது ஐம்பதுண்டு; துக்கமுண்டு. மார்பிலே வந்தால் வயது நாற்பது இருப்பான். முழுதும் வறுமையுண்டு என்று அறிக.[2]

அளக்கிற நூலுக்குச் சந்தனம் குங்குமம் சாந்து புனுகு மஞ்சள் எதுவா கிலும் பூசி அளக்கவும். மறந்து பூசாமல் அளந்தால் ஆயுசு க்ஷயமாக (அதாவது குறைவாக) இருக்கும். அளந்து பார்க்கும் லட்சணங்கள் எல்லாம் பெண்களுக்கும் புருஷருக்கும் ஒக்கும்.

புருஷ லட்சணம் முடிந்தது, முற்றும்.

---

[1] 'பெண்களுக்கு ஐம்பது வயதுக்கு மேலும் புருஷர்களுக்குப் பதினைந்து வயதுக்கு மேலும் அளந்து பார்ப்பது' என்று மற்றொரு பாடம்.

[2] இந்த விதமாக அளந்து வயது நிர்ணயிப்பதிலே நூறுவயதுக்குக் கீழ்ப்பட்ட அளவு விவரம் ஓர் ஏட்டிலே பின்வருமாறு வித்தியாசமாகக் கூறப்படுகின்றது :

நெற்றிக்கு வந்தால் வயது தொண்ணூற்றைந்து. புருவத்துக்கு வந்தால் தொண்ணூறு; மூக்கில் வந்தால் எண்பத்தைந்து; உதட்டுக்கு வந்தால் எண்பது; வாய்க்கு எழுபத்தைந்து. மோவாய்க் கட்டைக்கு வந்தால் எழுபது கழுத்துக்கு வந்தால் அறுபத்தைந்து. நெஞ்சுக்கு வந்தால் அறுபது. இதற்குத் தாழ்ந்தது எல்லாம் ஆயுசு சொற்பம் என்று சொல்லவும்.

கிடையாது. நடு மறு வெகுபோசனமுண்டு. மேல் அதரத்தில் வலது புறத்தில் இருந்தால் சோரச செலவு உண்டு. இடது புற மறு தூஷணம் சொல்லப்படும். நடு மறு நினைப்ப தொன்றும் சொல்லுவதொன்றுமாகப் பண்ணும்.

மேல் காதுக்கும் கீழ்க் காதுக்கும் நடு ஓரங்களில் மறு விருந்தால் வெகு போசனமுண்டு. இடதுபுறம் முகத்தில் மறு விருந்தால் துனபமுண்டு. வலதுபுற முகத்திலிருந்தால் வெகு போசனம் பண்ணுவான். சமபனன் னுவான்.

மூக்கில் வலதுபுறம் மறு செல்வம். இடதுபுறம் மறு வறுமை. நடு மறு சோரச செலவு மூக்கு முனனே நுனியிலே மறு விருந்தால் புத்தி மானுவான். மூக்குத்தண்டு மேலேயிருந்தால் வெகு செலவமுண்டு. இடது புறம் குவளை யோரத்திலே மறு விருந்தால் நினைக்கிறது ஒன்றும் சொல்லுவ தொன்றுமாகப் பண்ணுவான்.

வலது கண் வெள்ளை விழியிலே மறு விருந்தால் புத்திமான்; சோரச செலவுண்டு. இடது கண் வெள்ளை விழியிலே மறு விருந்தால் வெகு காமி யாவான். வலது புருவம் மறு நல்ல பெண்களைக் காணப்பண்ணும். இடது புருவத்தில் மறு பொல்லாததைக் காணப் பண்ணும். புருவமத்தியில் மறு மிகுந்த வார்த்தை உண்டாகும்.

நெற்றியில் வலது புறத்தில் மறு விருந்தால் செல்வமுண்டு. இடது புறத்தில் மறு விருந்தால் வறுமையாவான் நடு மறு ஆயுசு உண்டு.

வலது காதில் மறு விருந்தால் எந்நேரமும் தானங்களைப்பண்ணி, தர்மங் களைச் செய்து, சிவகதைகளை இசை ஆசையாயக் கேட்பான். இடது காதிலிருந் தால் பழிகளைச் சொல்லுவான ; அசப்பியங்கள், பொல்லாத வார்த்தைகளை விரும்பிக்கேட்கப்பண்ணும் அதர்மங்களைச் செய்விக்கும். வலது காதினுள்ளே வலஞ் சுழியோ மறுவோ இருந்தால் நவகோடி திரவியம் தேட வல்லவனு வான். இடது காதினுள்ளே இடஞ்சுழியோ மறுவோ இருந்தால் உவமை யில்லா வறுமையாவான். மாலாகிச் சில களவுகள் செய்வான். தலையில் வலது புறத்தில் மறு விருந்தால் முடி சூட்டி வாழப் பண்ணும். இடது புறத்திலே மறு விருந்தால் சடை கட்டிக்கொண்டு இரக்கப் பண்ணும். தலையிலே நடுவில் மறு விருந்தால் யத்தியில் தரித்திருவான்.

சுழி, மறு, வடு, தான் காணும் இடத்திலும் காணுத இடத்திலும் இருந்தால் பலிக்கும். அதிலேயும் பிறர் காணுதே இருக்கிறது பலிக்கும்.

இன்னும் அளவிறந்த லட்சணம் உள்ளேயும் புறம்பேயும் உண்டு. அதிலே சில சில சொல்லுகிறோம். அதிலே புறக்குறிப் பலன்களும் உட்குறிப் பலன்களும் மிகுதியும் பலிக்கும். புருஷருக்கும் பெண்களுக்கும் புறக்குறி யினுலே உட்குறிகள் சிலவும் அறியலாம். இன்னும் அளவிறந்த குறிகளும் உண்டு. கன்னமும் அக்குளும் முகமும் அங்கையும் வாயும் உட்குறி அறியும் வழியாய் இருக்கும் என்றறிக.

### கயிறு அளந்துபார்க்கிற லட்சணம்.

அதிலே கயிறு அளந்து பார்க்கிற லட்சணம் பெண்களுக்கும் புருஷருக் கும பொதுவாயிருக்கும். பெண்களுக்குப் பாஷிமூஷ்டு வைராக்குமேல்

அவளுடைய வார்த்தை மேலாயிருக்கும். கும்பம்போலே யிருந்தால வெகு கபடியாயிருப்பாள். மத்தளம்போலே யிருந்தால வெகுளி மனசா யிருப்பாள். வாளபோலே யிருந்தால வெகு கொலைபாதகஞ் செய்வாள. வெண்சாமரைபோலே இருந்தால வெகு சனங்களை ரட்சிப்பாள.[1] சந்திரன போலே இருந்தால விபசாரியாவாள். சூரியனைப் போலே இருந தால் பதிவிரதையாவாள. ரேகைகள சிவந்திருந்தால் சுதேசத்திலே[3] இருப்பாள. கறுத்திருந்தால அன்னிய தேசததிலே போய்த திரிவாள.[2]

குதிககால முதற்கொண்டு நடுவிரல்நுனிமட்டும ஒரு ரேகை இடையறு திருந தால அவள மிதித்த இடமெல்லாம பொன்னும். அவளிடததிலே லக்ஷ்மி குடி யாயிருப்பாள. எல்லாச செல்வமும அவள இருக்கிற இடம் தானே வரும். அவளுடைய முகத்திலே விழித்தாலும செய்த பாவஙகளெல்லாம் போகும். அவளைக கொண்ட புருஷன அநேகம் பேருக்குக கர்த்தனுவான. அந்த ரேகையிலே குறுக்கே புள்ளடியாக யிருந்தால அவள சனமம் உள்ளமட்டுக கும் முழுவறுமை யாவாள.

பாம்பு போலவும எலி போலவும கழுகுபோலவும் இருந்தால வறுமை யாவாள. அவள போயிருந்த இடமெல்லாம் வறுமையாம். சதுரமாக ஒரு ரேகையிருந்தால் அவளை எவனுகிலும் சரிபோகம் புணரமாட்டான ; கபட கோசமாதல், சூழங்கை யாதல் வேண்டும். அவள அதமியாவள; (விதவையாவள்). உள்ளஙகாலிலே ஒரு ரேகையும காணபியாதிருந்தால சொப்பன போகம்.[4] மிருதியாய் அவள பிராகப புணர்ச்சியினலே திருபதி[5] யடைவாள : மற்றது எல்லாம பொருந்தாது.

நடை.

[அவள] நடக்கிறபோது நிலம அதிர நடநதால அவள மிதித்த இடம எல்லாம்[6] குட்டிச்சுவராய்ப போம. அவள முகததிலே விழிக்க வொண்ணுது. நடககும்போது குதிககாலிலே நெட்டை முறிநததுபோலச் சத்தமுண்டானுல ஒருததா மேலும் பற்றுதல இல்லாதவள.

உள்ளங்கால்.

உள்ளஙகால பதிநது பூமியிலே பட இருந்தால வெகுசெலவமுண்டு. உள்ளஙகால் நடுவே எறுமபு போக வழியிருநதால வெகு கோபி யாவாள் ; கொஞசமாய்ச் செலவம உணடு. உள்ளஙகால மிருதுவானுல வீரி யம முநதிப்போம் ; அறப போகியாவாள். உள்ளங்கால கடினமாயிருந்தால வீரியம் பொட்டென விடாது; வெகு போகியாவள் ; கொஞசமானுல் செலவும் உண்டு. அலைச்சலுணடு.[7]

---

(பா-ம்) [1] இனஙகளை நன்றும் ரக்ஷிப்பாள [3] சுகத்திலே.

[2] வாழ்க்கைப் படுவாள ; தேசதேசத்திலே போய் திரிவாள ; அன்னிய ரிடத்திலேபோய்ச் சேர்வாள.

[4] அதாவது சொறப போகம் என்று கொள்ளலாம். (பா-ம்) [5] ரேத்தி.

[6] அவள இருந்த வீடு எல்லாம். [7] உலைச்சல் உண்டு.

# ஸ்திரீ லட்சணம்

## (மகளிர் இலக்கணம்)

பெண்களை லட்சணங்களை அறிவது :

“ பூலோகத்திலே பிறக்கிற பெண்களிலே பதிவிரதையா யிருக்கிறவளையே விவாகம் பண்ணவேண்டு மென்று திருவுள்ளம் பற்றிச்சதே ! அந்தப் பெண்கள் வாழ்க்கைப்படுகிறதுக்கு முன்னே பதிவிரதை என்கிறதும், விபசாரி என்கிறதும் எப்படி அறிகிறது ? ” என்று அகஸ்திய மகாமுனிவர் சுப்பிரமணியரைக் கேட்கச் சுப்பிரமணியர் அகஸ்தியருக்குத் திருவுள்ளம் பற்றினது யாதெனில் ; “ அப்படிக்கொத்த பெண்கள் வாழ்க்கைப் படுவதற்கு முன்னே பதிவிரதை யென்கிறதும் விபசாரி யென்கிறதும், அற்ப ஆயுசு என்கிறதும் தீர்க்காயுசு என்கிறதும், செல்வமுள்ளடென்கிறதும் வறுமை யுண்டென்கிறதும், சுகத்திலே யிருப்பாளென்கிறதும் கஷ்டப்படுவாள் என்கிறதும், தன் தேசத்திலே இருப்பாள் என்கிறதும் அன்னிய தேசத்திலே போவாளென்கிறதும், விதவை யுண்டாயிருப்பா ளென்கிறதும் உலைச்சலாயிருப்பாளென்கிறதும்,[1] புத்திருண்டாயிருப்பாள் என்கிறதும் மலடியென்கிறதும், அழகுண்டென்கிறதும் அழகில்லை யென்கிறதும், கபடுஉண்டென்கிறதும் கபடில்லையென்கிறதும், அவள் நினைத்தது முடியு மென்கிறதும் முடியாதென்கிறதும், ஸ்திரீகளுடைய சரீரத்திலே பாதாதி கேச பரியந்திரமும் உள்ள லட்சணங்களைப் பார்த்து அறிந்து நிச்சயிக்கலாம் ” என்று சுப்பிரமணியர் திருவுள்ளம் பற்ற, அகஸ்திய மாமுனிவர் தண்டம் பண்ணி, “சுவாமி, அப்படி இருக்கிற லட்சணங்களை எல்லாம் வெளி[ப்படை]யாக அடியேனுக்குத் திருவுள்ளம்பற்ற வேண்டும்” என்று வணங்கிக் கேட்க, சுப்பிரமணியர் அகஸ்தியருக்கு வெளியாகச் சொன்னபடி :

“பெண்களுக்கு உள்ளும் புறமுமாக அளவில்லாத லட்சணம் உண்டு. அதிலே சிறிது சொல்லுகிறோம் ” என்று திருவுள்ளம்பற்றுகிறார்.

### பாதம்.

பெண்களுக்கு உள்ளங்கால் வெது வெதுத் திருந்தால்[2] வெகு செல்வம் உண்டு ; குளிர்ந்திருந்தால் வறுமையுண்டு. பாதமானது செவ்வையாய்ச் சின்னதாக விரல் ஒத்து மண்மேல் சமந்து [படிந்து] புறவடிக்கு இசைந்து உயர்ந்து இருந்தால் வெகுசெல்வம். அவள் இருந்த வீட்டுக்கு உண்டான வெகு போக பாக்கியத்தை அனுபவிப்பாள் ; உத்தமம்.

### உள்ளங்கால் ரேகை.

உள்ளங்காலிலே ரேகைகள் கொடிபோல இருந்தால் முற்றும் அழகாயிருப்பாள். மீன் போலே ரேகை யிருந்தால் வெகு காமவிகாரியாவாள். சக்கரம்போலே யிருந்தால் வெகு திரவியம் உண்டு; மேலும் திரவியம் சேரும். சங்குபோலே யிருந்தால் நூறு வயது இருப்பாள். டமருகம்போலேயிருந்தால்

(பா-ம்.) [1] உலுத்தம் உண்டென்கிறதும். [2] வெதும்பி அதாவது சூடாக இருந்தால்

  

பாதத்திலிருக்கிற நடுவிரலுக்குச சரியொககில நல்ல குணம். பொன்னும மணியும் முத்தும் உணடாகிய ராசாவுக்குத் தேவியாவாள். அணி விரல பூமியிலே பாவாதிருந்தால செல்வம் குன்றும் ; குணமில்லை. அவள தன புருஷனை விட்டு வேறொரு புருஷனைக கூடி வாழ்வாள். விரல்களிலே சுழி யுணடாயிருநதால் வெகு வெகு செலவ முண்டு.

## நகம்.

நகம் வட்டமாய்ப பணம் போலே யிருநதால் அழகுணடு. நகம் சிவந திருநதால் தீர்க்காயுசுணடு. நகம் மிருதுவாகுல புணர்ச்சி எநநேரமும் கிடைக்கும். நகம் வெளுத்திருந்தால் இகழ்சசிப்படுவாள். உரத்திருந் தால் நாணம இல்லாதவளா யிருபபாள. நகம் நீண்டிருநதால எவர் பேரி லேயும மனசாயிருப்பாள ; பற்றும் கூடக் கிடையாது. நகமானது பிரிநது இறைசசிக கொததுப போலே சிவநதிருநதால வெகு நன்மையுண்டு. நக மானது விரலுடன சதையுடனே கூடி ஒனறித தளிரபோல இருநதாலும் நகமானது மழுஙகியிருநதாலும் நகமானது பிளந்திருநதாலும துக்க மெனபது.

## புறங்கால்.

புறஙகால பதிந்திருந்தால் அவள தன் புருஷனை எதிர்த்து [வார்த்தை] சொலலுவாள். புறஙகாலிலே மயிர இருந்தால வெகுகோபி யாவாள.[1] புறங்காலிலே நரமபு தோன்றில வறுமையுணடு. புறஙகாலிலே யாகிலும் விரலகளிலே யாகிலும் சுழி உணடாகுல் செல்வமுணடு.

## பரடு.

கறடு தராசுத தட்டுப் போலே இருநதால வெகு செல்வமுண்டு. கறடு திரண்டிருநதால, நீண்டிருந்தால, உலைச்சலுணடு. கறடு சிறுத்தால் அழ குண்டு. கறடு மிகவும பருத்திருநதால வறுமையுணடு.[2] அனனிய தேசததிலே போகவேணடும். கறட்டிலே மயிர் இருந்தால் வீறுய் அவள கொலையிலே சாவாள்.

## கணைக்கால்.

கீழ்க்கால வரால் மீன போலிருநதால் அவள் அனேகம் பெணகளுக்கு நாயகியாவாள.[3] கீழ்க்காலில நரம்பு தோனறினுல வறுமையாவாள். மயிர் தோனறியிருநதால் கோபியாவாள. கணைககால் மயிர் நெருங்கியிருந தாலும பருததுக கறுத்து இருந்தாலும் மலடியாவாள. மயிர சிவநதிருந் தால் தன் புருஷனை ஒறுப்பாள். கணைககால மயிர நுனி பிளந்திருநதால மாமன் மாமி முதலான பேரையும் மிஞ்சி நடப்பாள.

## முழங்கால்.

முழங்கால வட்டமாயிருநதால் அழகுண்டு. முழங்கால் நீண்டிருநதால விபசாரியாவாள.[4] முழஙகாலிலே ஒரு சுழியிருந்தால் அவளுக்குச சரியொக்கப் புணரக் கிடையாது அவள கிரமத்திலே[5] மிஞசுவாள. கபட கோசம் வேணடியிருபபாள்.

(பா-ம) [1] காமியாவாள. [2] ஆயுசு உண்டு. [3] மீன போலிருந்தால் நன்மை. [4] வெகு காமியாவள. [5] காமத்திலே.

### குதிக்கால்.

குதிக்காலானது பந்து போலே இருந்தால் ஆயுசு உண்டு. குதிக்கால் நீண்டிருந்தால் ஏழையாயிருப்பாள். குதிக்கால் பருத்திருந்தால் கபடியாவள். குதிக்காலிலே ஒரு சுழியாதல் கறுத்த மறுவாதல் இருந்தால் அவள் தொட்டதெல்லாம் பொன்னாகும். இத்தனை லட்சணமும் பெண்களுக்கு இடது காலிலே பார்ப்பது. இத்தனையும் வலது காலிலே யிருந்தால் மாறுன பலனாகுமென்று சொல்வாருளர்.

### கால்விரல்.

இடது காலிலே பெரு விரல் நீண்டிருந்தால் அழகு உண்டு. பெருவிரலினாலேயும் உடலகுறி சில சில அறியலாம். பெருவிரல் தட்டை[1] யானால் கைம்பெண்ணாவாள். மெத்த நீண்டிருந்தால் வறுமையாவாள். மற்ற நாலு விரலும் பெருவிரலை யொத்து நீண்டிருந்தால் அன்னிய புருஷர் மேலே மனதாயிருப்பாள்; புணர்ச்சி கிடையாது கட்டுப்பட்டுப் போம். நாலு விரலும் மிக நெருங்கி[யிருந்தா]ல் வேலை மிகுதியாய்ச் செய்வாள். அன்பு இராது. நாலு விரலும் மெத்தக் குறுகினால் அற்பாயுசு. நாலு விரலும் குன்றேறினால் போலே இருந்தால் அமங்கலையாவாள் அல்லது அவளைக் கூடினால் பின்பு அவளைக் கூடவேண்டி இராதேபோம். நாலு விரலும் அலக் கலக்கலாயிருந்தால் (அதாவது விலகி இருந்தால்) அவளுக்கு ஒரு காசும் ஆஸ்தி யாயச்சேராது.

சிறு விரல் பூமியிலே படாதிருந்தால் அவள் தன் புருஷனை மெத்த ஒறுப்பாள். பெருவிரலண்டை யிருக்கிற விரல் பெருவிரலினும் நீண்டிருந்தால் அவள் சிறுபெண்ணாய் விளையாடுகிறபோது தானே சிறு பிள்ளைகளுடனே கூடிப் புணர்ந்துகொண்டு திரிவள். அவள் பின்பு பதிவிரதையாவாள். அஞ்சு விரலும் ஒன்றுக்கொன்று குறைந்து சிறுத்துப் பொஸ்தகம் போலே இருந்தால் ஆயுசும் அழகும் செல்வமும் உண்டு. அஞ்சு விரலும் ஒன்றுபோல் சரியாகியிருந்தால் வெகு கபடியாவாள்.

காலின் விரலின்மேலே மயிர் மிகுதியானால் மனக்கிலேசம் உள்ளவளாயிருப்பாள். விரலிலே நரம்பு எழுந்து கண்டால் வறுமையாவாள்; அல்லது வெகு தூரம் போகவேண்டும். அஞ்சு விரலும் வளைந்து சுருண்டு இருந்தால் காம மிகுதியாம்; புணர்ச்சி கிடையாதே போம், அல்லது வறுமை உடையவள் ஆவாள். விரல்களெல்லாம அற உலர்ந்தால் அழகு பொட்டென்ப போய்விடும். கால் பெருவிரலிலே மயிர் மிகுந்து பருத்து நெருங்கினால்[2] உழைப்பு மிகுதியாம். மயிர் சிறுத்து நெருங்கினால் கைம்பெண்ணாவாள். மயிர் சிவந்து நெருங்கினால் வெகுதுன்பமும் சிறையு முண்டு; அல்லது மாமி, நாத்தனார், புருஷன் முதலானவர்களாலே வெகு துன்பமுண்டு. சிறுவிரலும் அடுத்த விரலும் ஒத்துச் சரியானால் விபசார முண்டு; ஆனால் அது அடக்கமாயிருக்கும். கால் பெருவிரலுக்குச் சுட்டுவிரலானது நீளமாகில் கன்னி தன கணவனைப் பேறும். மங்கை காலின் பெருவிரல் நீளில் கன்னியே கணவனைப் பேறும். நாலு விரலும் பூமியிலே படிந்து இருந்தாலும் பெருவிரல் எடுத்து இருந்தால் சுற்றத்தாரை விட்டு வாழ்வாள்.

(பா-ம்) [1]கட்டை. [2]கறுத்து நெருக்கினும்.

### மணி.

மணி சிவந்து சிறுத்து உள்ளடங்கியிருந்தால் பதிவிரதையான வள். மணி பருத்து நீண்டிருந்தால் விபசாரியாவள். மணி சிறுத்து நீண்டிருந்தால் வறுமையும் விபசாரமும் உண்டு. மணி வட்டமாய்க் குமிழ் நுனி போலே இருந்தால் மலடியாவள். மணி கறுத்திருந்தால் போகமுண்டு.[1] வெளுத்தால் வியாதி. இளிமூக்குப்போலே இருந்தாலும் கூனையாய் இருந்தாலும் அன்னியதேசத்திலே போய்ப் பிழைக்கவேண்டும். மணி தேன் வாசனையானால் செல்வமுண்டு. இந்திரியம் மிகுதியாம். மணி இளநீர் வாசனையானால் ஆயுசு . . . . பால் வாசனையானால் இந்திரியம் முந்திப் போம். தாமரைப்பூ வாசனையானால் அழகுண்டு. செண்பகப் பூ வாசனையானால் அவள் வார்த்தை செல்லும்; மிடியாம். மல்லிகைப் பூ வாசனையானால் அவள் எல்லாருக்கும் அன்பாயிருப்பாள்.

மணி உதிர நாற்றமானால் ஏழு பிள்ளைகள் உண்டு. அழுகல் நாற்றமானால் வறுமையும் [பாஉ. மு.] முண்டு. சுண்ணும்பு நாற்றமானால் உலைச் சலப்படுவள். புலால் நாற்றமானால் காமமும் இச்சையும் மிகுதி யுண்டு; கிடையாது. மணி கஷாய நாற்றமானால்[2] பிறந்த பிள்ளைகளெல்லாம் மரித்துப்போம். வெதும்பியிருந்தால் கண்டதுக்கெல்லாம் ஆசைப்படுவாள். மணி குளிர்ந்திருந்தால் வெகு போகியாவள். மணி எழுந்து மடிந்திருந்தால் கோபியுமாய் அற்பாயுசு உண்டு.

### சிறுநீர்.

சலம் விழும்போது வலம் புரியாய் ஒரு தாரையாய் விழுந்தால் செல்வமுண்டு. புத்திரரும் ஆயுசும் உண்டு. இடம்புரியாய் ஒரு தாரையானால் உலகாளுவள். வலம் புரியாய்ச் சிதறிவிழுந்தால் அதமியாய்த் திரிவள். இடம்புரியாய்ச் சிதறி விழுந்தால் பதிவிரதையாய்ப் புத்திரரைப் பெறுவள். வெகு சத்தமாய் விழுந்தால் எல்லாரையும் வலியப் புணருவள். அழுந்த விழுந்தால்[3] எந்நேரமும் புருஷனைப் பிரியாமல் இருப்பாள்; புணர்ச்சி மிகுதியும் வேண்டியிருப்பாள்.

### உள் குய்யம்.

உள் குய்யம் இரு விரலினாலே சுற்றிப் பார்த்தால் குடகாய் வெகு விசாலமாய் இருந்ததானால் வெகு காமியாவள். பதினாறும் பெறுவள்; செல்வமுண்டு. உள் குய்யம் சிறுத்தால் வறுமையுண்டு. உள் குய்யத்தினுள்ளே நடுவே தாமரைக்காய்போலே[4] ஒரு தசை எழுந்து இருந்தால் ஆயிரம் பேரை இரட்சிப்பாள்; வெகு காமியாவள். அந்தக் குறி மிகுதியும் நீண்டிருக்கக் கண்டால் மலடியாவாள். கடினமானால் அநேகம் பேரைக் கொல்லுவாள். மெதுவாக இருந்தால் செல்வம். சங்கிலி திருகினாற்போலே புழையாய் இருந்தால் மலடியாவள். உள்குய்யம் இடது புறத்திலே சாய்ந்திருந்தால் பதிவிரதை. வலது புறத்திலே சாய்ந்து இருந்தால் விபசாரம். செவ்வையாயிருந்தால் (மையமாக இருந்தால்) செல்வமுண்டு. ஆயுசும் திரவியமும் உண்டு.

---

(பா-ம்) [1] பலமுண்டு. [2] கெட்ட நாற்றமானால். [3] அமர்ந்து விழுந்தால்.
[4] காரைக்காய்போலே; களாக்காய்போலே.

## தொடை.

தொடையானது இரண்டும் ஒத்து இடைவெளி இல்லாமல் வாழைத் தண்டு போலே இருந்தாலும் மருங்கி இருந்தாலும் அழகுண்டு; ஆயுசும் செல்வமும் உண்டு. தொடையிலே மயிர் மிகுதியானால் அமங்கலியாவாள். தொடையிலே நரம்பெழுந்தால் வறுமையாவாள். இரு தொடைகளும் இடைவெளியானால் கிலேசமுண்டு. தொடைகள் கடினமானால் வெகு காம விகாரியாவாள். தொடையிலே சுழியிருந்தால் வெகு கபடியாவாள்.

## புறக்குய்யம்.

புறக்குய்யத்தில் மயிர்கண்டால் மலடியாவாள். கடினமானால் அனேகம் பேரைக் கொல்லுவாள். மிருதுவானால் செல்வமுண்டு. சங்குபோலே திருகின புழையானால் மலடியாவாள்.

## அல்குல்

அல்குல் அவர் அவர் கையினாலே ஆறங்குலமாகி அகலமானால் வெகு செல்வம் உண்டு. அஞ்சு அங்குலமானால் வெகு புத்திரருண்டு. நாலு அங்குலமானால் மலடியாவாள். மூன்று அங்குலமானால் அவள் பெற்ற பிள்ளையெல்லாம் ஓடிப்போம் அல்லது மரிக்கும். இரண்டு அங்குலமானால் முழு வறுமை. அல்குல் மூன்று கோணமானால் அவளிடத்திலே லட்சுமி தானே சென்று குடியிருப்பாள் அல்குல் அரசிலைபோலே இருந்தால் வெகு செல்வமுண்டு, சுகத்தை அடைவாள். காமம் கிடையாது. அவரை விதை[1] போலேயிருந்தால் எவரையும் வலியப் புணருவாள். எருமை நாக்குப் போலேயிருந்தால் மிகுதியும் சலக்கட்டுண்டு. சுகத்தை அறியாள்.[2] அல்குல் சதுரமாகயிருந்தால் பாவங்களையே பண்ணுவள். வட்டமானால் தைரியவாளாவள் (தைரியவதி ஆவாள்). சத்துரு விசயம் செய்வாள்.[3].

அல்குல் இடப்புறம் உயர்ந்திருந்தால் ஆண்பிள்ளை முந்திப் பெறுவள். வலப்புறம் உயர்ந்திருந்தால் பெண்பிள்ளை முந்திப் பெறுவள். இருபுறமும் சரியாயிருந்தால் மலடியாவள். அல்குல் இடப்புறத்திலே ஒருசுழி இடம்புரியாயிருந்ததானால் உலகாளும் மன்னனுக்குத் தேவியாவள். வலஞ்சுழியாயிருந்தால் புருஷனை இழந்து தானே உலகாளுவள். அல்குல் வலது புறத்திலே ஒரு சுழி இடம்புரியானால் வறுமையாவள். வலம்புரியானால் அற்பமான செல்வம்; வெகு காமமுண்டு.

## அல்குல் ரோமம்.

அல்குல் மயிர் பருத்துக் கறுத்து நெருங்கினால் அமங்கலியாவள். கறுத்துச் சிறுத்துக் கலக்க ஒவ்வொன்றுயிருந்தால் ஆயுசு பரியந்தம் திரவியம் அடைந்து புருஷனுடனே கூடி வாழ்ந்து கொண்டிருப்பள். எலி மயிர்போலே மெதுவாயிருந்தால் பதிவிரதையாவள். மயிர் சிவந்து நெருங்கியிருந்தால் வெகு விபசாரியாவள். [அல்குல்]மான் குளம்படிபோலே இருந்தாலும், மயிரில்லாதே இருந்தாலும் இனங்களை ரட்சிப்பாள்.

(பா-ம) [1] வளர்பிறைபோலே. [2] கொறுண்டு; சுகத்தை அடையாள். [3] இருபவே செய்வாள்.

## வயிறு.

வயிறு தட்டையானால் கிலேசமுண்டு. மிருசினால் விதவையாவள். நரம்பெழுந்தால் வறுமை. இடைவெளியானால் கிலேசம். மிஞ்சின தொந்தியானால் மாமனுக்கு மரணம். வயிற்றிலே மயிர் மிகுதியானால் விதவையாவள். மயிரில்லாதிருந்தால் கைமையாவள். மயிர் நெருங்கினால் விபசாரியாவள்.

## ரோமவல்லி.

ரோமவல்லி நாபி தொடுத்து முலைமட்டும் மயிர் ஒத்து ஒரு கிறுப்போல மேல்நெருங்கியிருந்தால்[1] அழகும் ஆயுசும் செல்வமும் சோரசெலவும் உண்டு. ரோமவல்லி கோணலாயிருந்தால் அமங்கிலியாவள். ரோமம் சிவந்தால் கோபியாய்த் திருடியாவள்.[2] ரோமம் இடைவிட்டிருந்தால் செல்வம் வந்துபோய், வறுமை வந்து போய்ப் பின்னும் செல்வம் வரும். மார்பிலே மயிர் இல்லாமல் இருபுறமும் சரியாய் மட்டிலே உயர்ந்திருந்தாலும் அழகு ஆயுசு உண்டு. மார்பில் மயிர் இருந்தால் புருஷன் போவான். அவள் விபசாரியாவள்.

## மார்பு.

மார்பு அவரவர் கையினாலே பதினேழு அங்குலமானால் உலகாளவள். பதினெட்டு அங்குலமானால் விபசாரியாய் உலகாளுவாள். பத்தொன்பது அங்குலமானால் தீர்க்காயுசும் அழகும் கற்பும் நற்குணங்களும் உண்டு. இருபது அங்குலமானால் ஆயிரம் பெண்கள் ஊழியம் செய்வார்கள். அதற்குமேல் எத்தனை அங்குலம் இடமானாலும் அற்பாயுசாய்ச் சாவாள். பதினேழு அங்குலத்தின் கீழே எத்தனை அங்குலம் குறுகினாலும் அந்த அளவு செல்வம் சிறுக்கும்.

## கொங்கை.

முலை கிண்ணம் கவிழ்த்தாற்போலே இருந்தால் செல்வம் மிகுதியுண்டு. செப்புக் கவிழ்த்தாற்போலே இருந்தால் அழகும் ஆயுசும் உண்டு. இடங்கொண்டிருந்தாலும் மெத்த மிருதுவானாலும் மெத்த விழுந்துபோம்; அவள் புணர்ச்சிக்கு நல்லவள். மார்பிலே சதையும் இடப்புறம் மறுவும் இருந்தால் சம்பத்து உண்டு ; புண்ணியவதியுமாய் இருப்பாள். வலது மார்பு ஒன்று அகலமாயிருந்தால் வெகு புத்திர சம்பத்து உண்டு. கவிழ்ந்த மார்பானாலும் மேட்டு மார்பானாலும் வறுமையாம் ; பொல்லாத திருடியும் ஆவள். ஸ்தனம் கதித்து வந்த முலையானால் விவேகம் உண்டாம் ; புருஷவாஞ்சை உண்டாம் ; புணர்க்கிடையாது. பருத்துச் சுணங்கு[3] சிந்தியிருந்தால் புருஷன் பேரில் வெகு ஆசையுண்டாக நல்ல குணமுண்டாம். வெகு நூச்சியாக இருந்தால் ஆகாது. [நெருங்கி இருந்தால்] புத்திரருண்டு. கூடினவனைப் பிரிய மாட்டாள். ஐசுவரியம் உண்டு. அகன்று இருந்தால் தனக்குச் சொல் மேலாய் இருப்பாள். நாலு பேரும் மெச்ச நடப்பாள். மங்கலியக் கழுத்தமாவாள். முலை இரண்டும் இடையகன்றால் இரண்டு மூன்று வருஷத்திலே

(பா - ம்) [1] மேல்நோக்கியிருந்தால். [2] இடுவாள். [3] சுணங்கு=தேமல்.

## அடிவயிறு.

அடிவயிறு கீழே பருத்து வரவரச் சிறுத்தால் செல்வமும் அன்பும் உண்டு. அடிவயிறு அடி சிறுத்து மேலே பருத்தால் அழகும் கடின குணமும் உண்டு. அடிவயிறும் மேல்வயிறும் மிதத்துப் பூசனிக்காய்போலே இருந்தால் வெகு பொசிப்புவேண்டும். வெகுகாமமும் வேண்டும். அடிவயிற்றினமேலே மயிரொழுங்கு குயயம் அளவாகக் கீழ்நோக்கியிருந்தால் ஒரு பிள்ளையை உலகமெல்லாம் (ஆளக்) கொண்டாடப் பெறுவள். அந்த ரோம ரேகை மேலே நோக்கியிருந்தால் எல்லாரையும் உதாசினமாகப் பேசுவாள்; சிரிப்பாள். அந்த மயிர் சற்றும் இல்லாதிருந்தால் பதிவிரதையாவள்.

## நாபி (தொப்புள்).

நாபி இடஞ்சுழியாய் உள்ளே குவிந்திருந்தால்[1] நல்லகுணம் உண்டு. பதிவிரதையாய்ச் செல்வமும் உண்டு. நாபி வலஞ்சுழியானால் மிடியும் விபசாரமும் உண்டு. உயர்ந்திருந்தால் மிடியும் விபசாரமும் களவும் உண்டு. நாபி கெட்ட நாற்றமானால்[2] வெகு கிலேசமுண்டு. சுண்ணாம்பு நாற்றமானால் பொய்யே சொல்லுவள். இளநீர் வாசனையானால் வறுமையும்[3] காமமும் உண்டு. சுகந்த புஷ்ப வாசனையானால் அவளைக் கண்ட புருஷரெல்லாம் ஆசை படுவர். அவர்கள் கூடினாலும் பிரியமாட்டார்கள்; பிரிந்தால் உடனே மரிப்பர்.

## வயிற்று மடிப்பு.

வயிற்றில் மடிப்பு ஒன்று, மூன்று, அஞ்சானால் வெகு செல்வம் உண்டு; காமமில்லை. நாலு, இரண்டு மடிப்பானால் செல்வமும் காம மிகுதியும் உண்டு. மடிப்புச் சிறுத்து நடுவில் ஒற்றி[4] (அதாவது ஒற்றையாகி)க் கடைசியிலே இரட்டித்துக் கண்டால் வெகு வித்தையுண்டு; கோபியாவள். ஒரு மடிப்பும் இல்லாதிருந்தால் வெகு புத்திருண்டு. வயிற்றில் மடிப்புகளைப் பிடித்து நெருடிப் பார்த்தால் உள்ளே ஒரு சலாகை போலேயிருந்தால் மலடியாவள். அடி மடிப்பிலே ஒரு சுழியிருந்தால் அவள் பெற்ற பிள்ளைகளெல்லாம் செல்வமாயிருக்கும். இரண்டாம் மடிப்பிலே ஒரு சுழியிருந்தால் அவள் பெற்ற பிள்ளைகள் எல்லாம் செத்துப் போகும். மூன்றும் மடிப்பிலே ஒரு சுழியிருந்தால் அவள் பெறுகிற பிள்ளைகளெல்லாம் பெண்ணும். நாலாம் மடிப்பிலே ஒரு சுழியிருந்தால் வெகு கோபியாய்ச் சண்டைக்காரியாவாள். அஞ்சாம் மடிப்பிலே ஒரு சுழியிருந்தால் அலைச்சலுண்டு; கிலேசமும் கபடும் உண்டு. வயிற்றிலே ஒரு சுழியும் இல்லாதிருந்தால் பதிவிரதையாவள்; காமத்திலே வெகு ஆசையுண்டு; புணர்க்கிலடையாதுபோம். மடிப்புகள் மிருதுவாக இருந்தால் வெகு புத்திருண்டு. மடிப்புக் கடினமானால் மலடியாவள்; அல்லது பிள்ளை பிறந்தாலும் செத்துப்போம்.

---

(பா-ம்) [1] குழிவாய இருந்தால். [2] நவக்கவி நாற்றமானால் [3] பொறுமையும். [4] மடிந்து.

## வயிறு.

வயிறு தட்டையானால் கிலேசமுண்டு. மிஞ்சினால் விதவையாவள். நரம்பு பெழுந்தால் வறுமை. இடைவெளியானால் கிலேசம். மிஞ்சின தொந்தியானால் மாமனுக்கு மரணம். வயிற்றிலே மயிர் மிகுதியானால் விதவையாவள். மயிரில்லாதிருந்தால் ஊமையாவள். மயிர் நெருங்கினால் விபசாரியாவள்.

## ரோமவல்லி.

ரோமவல்லி நாபி தொடுத்து முலைமட்டும் மயிர் ஒத்து ஒரு கிறறுப் போல் கீழ்நெருங்கியிருந்தால்[1] அழகும் ஆயுசும் செல்வமும் சோரச் செல்வும் உண்டு. ரோமவல்லி கோணலாயிருந்தால் அமங்கிலியாவள். ரோமம் சிவந்தால் கோபியாய்த் திருடியாவள்.[2] ரோமம் இடைவிட்டிருந்தால் செல்வம் வந்துபோய், வறுமை வந்து போயப் பின்னும் செல்வம் வரும். மார்பிலே மயிர் இல்லாமல் இருபுறமும் சரியாய் மட்டிலே உயர்ந்திருந்தாலும் அழகு ஆயுசு உண்டு. மார்பில் மயிர் இருந்தால் புருஷன் போவான். அவள் விபசாரியாவள்.

## மார்பு.

மார்பு அவரவர் கையினாலே பதினேழு அங்குலமானால் உலகாளவள். பதினெட்டு அங்குலமானால் விபசாரியாய் உலகாளுவாள். பத்தொன்பது அங்குலமானால் தீர்க்காயுசும் அழகும் கற்பும் நற்குணங்களும் உண்டு. இருபது அங்குலமானால் ஆயிரம் பெண்கள் ஊழியம் செய்வார்கள். அதுக்குமேல் எத்தனை அங்குலம் இடமானாலும் அற்பாயுசாயச் சாவாள். பதினேழு அங்குலத்தின் கீழே எத்தனை அங்குலம் குறுகினாலும் அந்த அளவு செல்வம் சிறுக்கும்.

## கொங்கை.

முலை கிண்ணம் கவிழ்த்தாறபோலே இருந்தால் செல்வம் மிகுதியுண்டு. செப்புக் கவிழ்த்தாறபோலே இருந்தால் அழகும் ஆயுசும் உண்டு. இடங்கொண்டிருந்தாலும் மெத்த மிருதுவானாலும் மெத்த விழுந்துபோம்; அவள் புணர்ச்சிக்கு நல்லவள். மார்பிலே சதையும் இடப்புறம் மறுவும் இருந்தால் சம்பத்து உண்டு; புண்ணியவதியுமாய் இருப்பாள். வலது மார்பு ஒன்று அகலமாயிருந்தால் வெகு புத்திர சம்பத்து உண்டு. கவிழ்ந்த மார்பானாலும் மேட்டு மார்பானாலும் வறுமையாம்; பொல்லாத திருடியும் ஆவள். ஸதனம் கதித்து எந்து முலையானால் விவேகம் உண்டாம்; புருஷவாஞ்சை உண்டாம்; புணர்க்கை கிடையாது. பருத்துச் சுணங்கு[3] சிந்தியிருந்தால் புருஷன் பேரில் வெகு ஆசையுண்டாக நல்ல குணமுண்டாம். வெகு பூச்சிமாக இருந்தால் ஆகாது. [நெருங்கி இருந்தால்] புத்திரருண்டு. கூடினவன் பிரியமாட்டான். ஐசுவரியம் உண்டு. அகன்று இருந்தால் தனக்குச் சொல் மேலாய் இருப்பாள். நாலு பேரும் மெச்ச நடப்பாள். மங்கலியக் கழுத்துமாவாள். முலை இரண்டும் இடையகன்றால் இரண்டு மூன்று வருஷத்திலே

(பா - ம்) [1] கீழ்நோக்கியிருந்தால். [2] திடவோன். [3] சுணங்கு—தேமல்.

கைம்பெண் ஆவாள். பொல்லாதவளும் ஆவாள். புடைபருத்த முலையுமானால் வறுமையாய்க் கஷ்டப்படுவாள்; பிள்ளை அற்பம். [கயிறுங்கலக் கொடியாயிருப்பாள்.] பணடி முலையானால் எண்ணமும் துக்கமும் பாதிநாள்; சுகம் பாதியுமாய் வெகு காமியாவாள். அகன்று பருத்த முலையானாலும் முகத்துக்கு உயரமானாலும், அவள் துணிச்சலான மனம் பெறுவாள். வறுமை திரும்பிப் பொல்லாங்கு செய்வாள். ஒன்று பருத்து ஒன்று சிறுத்தால் கபடி; வறுமையும் தூர்த்தத் தனமும் உண்டு. இரு [புறமும் சமமாக இருந்தால்] சுகம் பண்ணுவாள். இரண்டும் நெருங்கி இருந்தால் மக்கள் செல்வம் உண்டு. கலனுடபோலக் கனமாயிருந்தால் மலடியாவள். மார்பெல்லாம் பரந்து அகன்றிருந்தால் புருஷனுக்கு ஈனம் வரும்; பொல்லாதவளாயிருப்பாள். புணர்ச்சி விருப்பமாய் இருப்பாள். புணர்ச்சி கிடையாது. கூவிளம்பழம்[1]போலே இருந்தால் பதிவிரதை. நல்ல பாக்கியவதியுமாய்க் குணம் (வாய்ந்தவளாய்) இருப்பாள். முலைக்காம்பிலே நரம்பு எழுந்தால் பிள்ளை உண்டு. நல்ல பாக்கியமுண்டு. நரம்பு இல்லாதிருந்தால் மலடியாவள்; பாடுபட்டு உழைத்து உண்ணவேண்டும்; வெகு துக்கம் உண்டு, படுபவள். தொப்பை முலையானால் வெகு துக்கப்படுவாள்; வறுமையுமுண்டு. சற்றே சரிந்த முலையானால் புருஷ நாட்டமாய் இருப்பாள்; வெகு அடக்க அவிசாரியுமாவள். வெகு போகியுமாவள். நாய் முலைபோலே ஒட்டியிருந்தால் வெகு கஷ்டமான துக்கமே உண்டாகும்; நல்ல வயதிலேயே விதவையாவாள். பருத்து நீண்டிருந்தால் வெகு மோகி. புணர்ச்சிமேலே விருப்பம் ஆவாள். வெகு பொல்லாதவள். ஆங்காரி. புருஷனை அடக்குவாள். முலைக்காம்பு பருத்திருந்தால் வெகு மோகி. இஷ்டமுள்ளவரைக் கொள்ளுவாள். அற்பப் பதிவிரதை. அற்பத் திரவியம் உண்டு. நாலு பேரையும் நேசிதம் பண்ணுவாள். பின் வறுமை.

மிகுதியும் பருத்து முலைக்கண் சிவந்தால்[2] அடக்கமாய் விபசாரியாவள். முலை உயர்ந்து கூர்ச்சாயக் குத்து முலையானால் இழப்படுவள். முலையின் மேலே முலையாக இரட்டை முலையானால் அதிகக் காமி. அவளைக் கள்விலும் நீண்ட வொண்ணாது, நீண்டினால் ஆயுசு குறையும்; நம்பப்போகாது. சுரைக்காய்போலே பருத்திருந்தால் வாதமதியமாம். அவளைப் புணரும்போது தூர்க்கந்தம் மிகுதியாய் வீசும். பருசு ஒட்டிருப்ப போலே இருந்தால் வசப்படுவள். பித்தம் அதிகரிக்கும். வாளடிருந்தால் வியாதி. அவள் நடக்கிறபோது பின்னாலே பார்த்தால் இரண்டு முலையும் இரண்டு புறமும் பிதுங்கிக் காண்பித்தால் அவளை எத்தனை விதத்தாலே புணர்ந்தாலும் விரைக்குவிசை இந்திரியம் நீராய் வரும். வெகுசத்தமாய்ப் பிறக்கும். இரண்டு முலைக்கு நடுவெளி நாலு (அங்குலம்) விரல் கடையாயிருந்தால் வெகுபடியாவள். முலைக் கண் எந்த நாளும் கறுத்து இருந்தால் அழகும், ஆயுசும் புத்திரருமுண்டு. முலைக்கண் குழிந்திருந்தால்[3] மலடியாவாள். முலைக்கண் பருத்திருந்தால்[4] கபடியாய் விபசாரியாவாள். முலைக்கண் கடினமாயிருந்தால் ஒருத்தர் மேலும் ஆசையில்லாதவளாவாள். மிருதுவானால் வெகு போகியாவாள். முலைக்

[1] கூவிளம்பழம்—வில்வப் பழம் (பா-ம்) [2] கறுத்தால். [3] குழிவிழுந்திருந்தால். [4] பதிந்திருந்தால்.

கண்ணுக்குள்ளே நெருடிப் பார்த்தால் உள்ளே ஆணி நிறுத்தினாப் போலே முலை மேலே காணப்படாது (அதற்கு மலட்டு மலை ஆணி யென்று பேராம்) இருந்தால் மலடியாவாள். முலையிலே விசை நரம்பு[1] தோன்றினால் அவளைப் புணரும் புருஷனுக்கு விகாரமற்று வீணாய்த் தண்டு சோர்ந்து போம். வலது முலை உயர்ந்து இருந்தால் ஆண்பிள்ளை முந்திப் பெறுவாள். இடது முலை உயர்ந்து இருந்தால் பெண்பிள்ளை முந்திப் பெறுவாள்.

### கொங்கையில் மறுவும் சுழியும்.

முலையிலே எள்ளுமாத்திரமாக ஒரு பிறவிவடுவாதல், ஒத்த மறுவாதல் இருந்தாலும் இடஞ்சுழியாதல் இருந்தாலும் உலகையாளவாள். இடது முலையில் மறுவிருந்தால் பதிவிரதை யாவாள். வலஞ்சுழியா யிருந்தால் விபசாரியாவாள்; உலகாளவள். வலது முலையிலே இப்படிக் கொத்த மறுக்களிருந்தாலும் வலஞ்சுழியா யிருந்தாலும் வறுமையும் சிலேசுமும் கபடும் உண்டு. இடஞ்சுழியாயிருந்தால் அவள் கொலை அடைவாள். முலையிலே மயிர் கண்டால் விபசாரியாய் அலைந்து திரிவாள். இரண்டு முலைக்கு நடுவே மார்பிலே ஒரு பிறவிவடுவாதல், ஒத்தமறுவாதல், குமிழ்மறுவாதல், வடுவாதல், மீன்மறுவாதல், மயிர் மறுவாதல் இருந்தால் வித்தையும் புத்தியும் உண்டு. அவளைப் புணர்ந்தால் மறுதரம் புணரவேண்டியிராது. அவ்விடத்திலே வலஞ்சுழியா யிருந்தால் வெகு வறுமையாவாள். இடஞ்சுழியா யிருந்தால் செல்வமுண்டு. வலது முலையின் கீழேயாவது மேலேயாவது பக்கத்திலேயாவது ஒத்தமறுவாதல், மயிர்மறுவாதல் இருந்தால் வெகு சேதம் உண்டாகும். இடது முலையிலே இப்படியிருந்தால் வெகு ஆதாயம் உண்டாகும். முலைக் கண்களிலே மறுவாதல், வடுவாதல் இருந்தால் செல்வமுண்டு; புணர்ச்சி கொஞ்சமாம்.

### முதுகு.

முதுகு நடுவெலும்பு மறைந்து மயிர் இல்லாதிருந்தால் செல்வம் உண்டு. நடுவே எலும்பு தோன்றினாலும் வறுமையாம். நடு எலும்பின் பேரிலே நரம்பு தோன்றினால் வியாதியாம். மயிர் தோன்றினால் திடமுண்டு.

கீழ் முதுகில் மயிர் மிகுதியும் கறுத்துப் பருத்து இருந்தால் வெகு கபடும் ஆயுசும் அழகும் உண்டு. திரவியமு முண்டு. முதுகிலே சுழி பலவாய் இடம் புரியானால் மலடியாம். வலம்புரி யானால் பாவியாவாள். ஒன்றாய் இடஞ்சுழி யானால் உலகையாளுவள். ஒன்றாய் வலஞ்சுழியானால் விபசாரியாவாள். முதுகு இரண்டாயிருந்தால் பழி சேரக் கற்புடையாள் ஆவாள். ஒன்றானால் கற்பு உடையவள். முதுகுத்தண்டு கோலபோல நீண்டு இருந்தால் புருஷனை அகன்று போய் வாழ்வாள். நெளி முதுகானால் வெகு துக்கம். தூர்த்தத் தனம் உண்டு. எலும்பு தோன்றினால் வறுமையாவள்; வெகு பாவி; திருடியுமாவள். முதுகு பொன்தகம் சேர்ந்தாற்போல் இருந்தால் வெகு போக போக்கியமுண்டு; ராஜஸ்திரீயாவள். உத்தம குணமாக இருப்பாள். தர்ம சிந்தையாவள். முதுகிலே மயிர் மிகுதியானால் திருடுவாள்; பயப்படாள். முதுகிலே எலும்பும் நரம்பும் எழுந்து கண்டால் மிடியுண்டு. முதுகு அற

---

(பா-ம்) [1] விழு நரம்பு; பச்சை நரம்பு

உயர்ந்தால் சுமை சுமக்கவேணும். அறத தாழநதிருநதால் உலைச்ச லுண்டு. முதுகிலே இரண்டு வலஞ்சுழியாயிருநதால் அவள நினைத்ததெல்லாம் முடியும. இரணடு இடஞ்சுழியாயிருநதால வெகு போகியாவாள. ஒரு சுழி வலஞ்சுழியாயிருநதால அநேகம் பேரை ரக்ஷிப்பாள். ஒரு சுழி இடஞ்சுழியாயிருநதால் வறுமையுணடு. மூனறு முதலாய்ப பல சுழியாயிருந்தால் வெகு போகியாவள. ஒரு வலஞ்சுழி இருநதால் விபசாரியாவள, ஒரு சுழியிலே வலமபுரியும இடம்புரியுமானல் மலடியாவாள. நரம்பும் மயிரும் இல்லாவிட்டால செல்வமுணடு. மாருகில் வறுமையுணடு.

### விலா.

இடது விலாவிலே ஒரு இடஞ்சுழியிருநதால் அவிசாரியாவாள. அலைநது திரிவாள. காமமும் கிடையாது. வலது விலாவிலே வலஞ்சுழியிருநதால் கற்புடையாயிருப்பாள. இரணடு முதலான பல சுழி வலம்புரியாகவிருநதால் வறுமையுண்டு. மாருனல விபசாரமுணடு.

### அக்குள்.

அக்குள் உயாநதால் செல்வமுணடு. தாழ்நதால் வறுமை. மயிர் நாறறமும இல்லாவிட்டால் உலகையாளவள. கொஞ்சமான போகியாவாள. அக்குள அழுகல நாறறமானல் வெகு பேரை யாவாள. சுண்ணும்பு நாற்ற மானல் வறுமையுணடு. ஆனை மூத்திரம போல் நாறறமானல் மெத்த ஆசைபடுவாள ; பாடடுக்காரியாவாள அக்குள மயிர் சிவந்திருநதால் வறுமையுண்டு. கறுத்திருநதால் செல்வமுணடு. பருத்திருந்தால் பலம் உணடு. அக்குள இளநீர் வாசனையாயிருநதால் நல்ல புடவை உடுப்பாள. தாமரைப் பூ வாசனைபோலே யிருந்தால் நல்ல பொசிப்பு உண்டாவாள.

### தோள்.

தோள வெகு நெருநதோளா யிருந்தால் வெகு செல்வம் உணடு. கற்பு உடையவள. நல்ல குணமாக இருப்பாள. தோள உயர்ந்திருந்தால் வெகு வயதுணடு. தாழ்நதிருநதால் மிடியுணடு. பருத்தால் செல்வமுண்டு. சிறுத்தால் வெகு துக்கமுணடு வலது தோளிலே மயிர் இருந்தால் விபசாரியாவாள. இடது தோளிலே ஒரு இடஞ் சுழியாயிருந்தால் உலகாளவாள்.

### புறங்கை.

புறங்கைகள் திரண்டு மிருதுவாய் உயர்ந்திருந்தால் செல்வமுண்டு. நரம்பு எழுந்தால் வறுமையுண்டு; மயிர் எழுந்தால் புருஷனைக் கொல்லுவாள்.

### நகம்.

நகம் சிவந்து குவிந்தால் செல்வங்களுண்டு. வெளுத்துக் குவிந்திருந்தால் மிடியாம். கறுத்துக் குவிந்திருந்தால் வியாதி யுண்டு. சிவந்து விரிந்தால் உலைச்சல் உண்டு. வெளுத்து விரிந்தால் புருஷனைக் கூடியிராள். கறுத்து விரிந்தால் கைம்மையாம். நகம் உரத்தால் போகம் நிறைகும். சில[1] நகமானால் நில்லாது.

### கை விரல்.

கைவிரல்கள் சிறுத்து நீண்டால் அழகு உண்டு. பருத்து நீண்டால் பலம் அதிகமாம். சிறுத்துக் குறுகினால் உலைச்சல்[2]. பருத்துக் குறுகினால் உழைப்பு உண்டாம்.

### கைவிரல் இறை.

பெருவிரல் அடியிறை [........][3] ஒன்றானால் அற்பபோகமாம். பலவானால் மிடியும் வெகு போகமுண்டு. மேலிறையின்மேலே வலஞ்சுழியானால் செல்வ முண்டு. இடஞ்சுழியானால் ஆயுசுண்டு. மடிப்பானால் விபசாரம் உண்டு.

சுட்டுவிரலினுடைய அடியிறை ஒன்றானால் கற்புடையவள் ஆவள். பலவானால் விபசாரம் உண்டு. [நடுஇறை] ஒன்றானால் மனத்திலே விபசாரம். பலவானால் வார்த்தையிலே விபசாரம். [மேலிறை ஒன்றானால் விபசாரம்] அற்பமாய் மறைக்கப்படும். பலவானால் விபசாரம் மிகவுமுண்டு; மறைபடாது. மேலிறையின்மேலே வலஞ்சுழியாயிருந்தால் தேவதா பத்தியுண்டு. இடஞ்சுழியானால் கீர்த்தியுண்டு. மடிப்பானால் அவச செலவுண்டு.

நடுவிரல் அடி இறை ஒன்றானால் மெத்தக் கசப்பு, சலிப்புண்டு. பலவானால் வியாதியுண்டு. நடுஇறை ஒன்றானால் ஆயுசுண்டு. பலவானால் அற்பாயுசு ஆவாள். மேலிறை ஒன்றாகில் சுகபோசனமுண்டு. பலவாகில் பொசிப்புக் கிடையாது. மேலிறையின் மேலே வலஞ்சுழியாயிருந்தால் எல்லாருக்கும் நல்லவளாயிருப்பாள். இடஞ்சுழியாயிருந்தால் கோபியாவாள். மடிப்பானால் அபிமானி யாவாள்.

அணிவிரல் அடியிறை ஒன்றாகில், பூஷண முண்டு. பலவானால் கீர்த்தியுண்டு. நடு இறை ஒன்றாகில் கனவிலே பல பேரையும் புணருவாள். நனவிலே[4] கிடையாது. பலவானால் செல்வம் மிகுதியும் உண்டு. மேலிறை ஒன்றாகில் உழைப்புண்டு. பலவானால் சுகமுண்டு. மேலிறையின் மேலே வலஞ்சுழியாய் இருந்தால் தீர்க்காயுசு உண்டு. இடஞ்சுழியானால் ஆங்காரியாவாள். மடிப்பானால் மலடியாவாள்.

[சிறுவிரலைப்பற்றிய பகுதி காணவில்லை.]

---

(பா-ம்) [1] இலே. [2] உத்தம குணமாம்.
[3] இந்த இடத்திலே ஒரு பகுதி விடுபட்டுப்போயிருப்பதாகத் தெரிகிறது.
(பா-ம்) [4] பகலிலே.

## புறங்கை.

இடது புறங்கையிலே மயிராதல் மறுவாதல் ஒத்த மறுவாதல் குமிழ் மறுவாதல் பிறசி மறுவாதல் இருந்தாலும் வெகு செல்வமுண்டாம் திருமபின வயதிலே வறுமை வரும. இநத மறுககள தோளிலேயாவது கணணுககுத் தெரியாத இடததிலே இருநதாலும் ஆயுசு பரியந்தம் செல்வமும அழகும உணடு.

## கழுத்து.

கழுதது மட்டாக நீணடிருநதால நிறை செலவம உண்டு. வெகுவாய் நீணடிருந்தாலும் வெகு துககம ; விபசாரி யாவாள. குறுகித தடித்திருந் தால அதமியுமாய் வெகு வறுமை யுண்டு. கழுதது கமுகுபோலே இருந்து மயிரும் நரமபும இலலாது இருநதால வெகு அழகும ஆயுசும் உணடு. ஆபரணமும பூணுவாள. வெகுபோக முணடு. மாஙகலியக கழுததியாவாள. கழுத்திலே மயிர் இருநதால் வறுமை யுணடாம். நரம்பு எழுநதால் வியாதியுணடு.

## கழுத்துவரை.

கழுததிலே மூனறு வரை வலமபுரிச சஙகுபோலே இருநதால் உலகை யாளவாள. கறபுடையவளுமாய நறகுணியுமாய இருபபாள. நாலு வரை இருநதால வயது நூறும இருபபாள அஞ்சுவரை யிருநதால மிடியாவாள். இரணடு வரை யிருந்தால உலசசலுணடு ஒரு வரை யிருநதால மலடியா வாள. ஒரு வரையு மில்லாவிட்டால அறுதலி யாவாள. கழுததின நடுவே மூனறும வரையில மறுவாதல் பிறவிவடுவாதல் இருநதால் அழகும செலவமும ஆயுசும சோரச செலவுமுணடு கழுத்தில் இடபபுறத்திலே ரேகை நாலில ஒனறு இருநதால புருஷனுககு வேணடாதவளாவாள. கழுத்தில் வலதுபுறத்திலே நாலில ஒனறு இருந்தாலும கைமையாவாள. பிடரி நடுவேயிருந்தால் உலகாளவாள. காமம கிடையாது. கழுத்தைச் சுற்றி ஒரு ரேகை யிருநதால அவளைப புணாநதவாகளெலலா நம மரிபபார்கள். கழுத் திலே சிலரேகை இருநதால வலிய நாகம கொண்டு நஞ்சு தினறு சாவாள. எதத ரேகை யிருநதால அவள கழுத்திலே எநத நாளும மங்கலியம இருக்கும. இரணடு சுழி இடஞ்சுழியா யிருநதால அநேகம் பிள்ளைகள உண்டு. இரணடு சுழி வலம்புரியா யிருந்தால் புருஷனை ஒரு தேசமும தான ஒரு தேசமுமாவாள. மூனறு சுழி வலமபுரியானால் விபசாரியாவாள.

## தலைமயிர்.

உச்சி மயிர் அவர் அவர் கையினாலே முப்பத்து..... ..யகுலமானால் அவன புருஷன அநேகம் பேருக்கு உதவியாயிருபபான.

## தலை.

நடுத் தலையிலே ஒரு சுழி இடமபுரியா யிருநதால் மிகுநத செலவ-முடையவன ; பாவி.

### முகம்.

பட்டை முகமாக இருந்தால் பாவி, வெட்டிக குணம், வறுமை. அவள் முகம் பாாகக வெகு தோஷம். சிறுத்த முகமாக இருநதால் வெகு லாபமுண்டு, கற்புடையவள். புததிசாலி. தனபதி.

### குரல்.

குரல் ஆழ்ந்திருநதால வறுமை, பாவி, தொழில செய்யும.

### வாய்.

சப்பை வாயாக இருநதால பொலலாதவளாயிருபபாள.

### உதடு.

உதடு பருத்திருநதால வெகு கஷடபபடுவாள. சோரததனம் உணடு. குறை உதடாயிருந்தால காமத்து மேலே அபேட்சையும் களிியுமாய் இருப்பாள. தொஙகு உதடாக இருந்தால காமி; வறுமையாயிருப்பாள. இரு உதடும் சிறுகி இருநதால் உததம ஸதிரீயாய நலல குணமும் செல்வ மும் உண்டு. உதடு, நாககு, [உள்ளங] கை, [உளளங] கால இவை கறுபபா யிருந்தால் வெகு துககம; மகா பாவி, தரிததிரமாவாள.

### பல்.

பலலு முத்துக கோவையா யிருநதால ராசபோகம். உததமம, சறகுணி, வெகு போகி. ஒரு ஒளியுமிலலாமல நீணடு இருநதால வெகு துனபம். வறுமை. தூரததததனம் உண்டு. இரணடு பலலும சிறுத் தாலும் பருத்த பலலாக இருநதாலும வெகு துஷடை, பாவி, காம சிந்தனை யாவாள்.

### முகம்.

முகம் பூர்ண சநதிரன போலே இருநதால் ராசபோகம் உடைய வள. வெகு செல்வம் உணடு. புத்திரருணடு. சூரியமணடலம் போலே இருந்தால வெகு ஐசுவரியம உணடு பூர்ணாயுசும நல்ல குணமும் வெகு புத்திரரும உணடு. சிஙகமுகம போலே இருந்தால் வெகு துககு முணடு. இரணடு சுழி இடம்புரியானால் நூறு வயசு. செல்வமுண்டு. மூன்று சுழி இடம்புரியானால் அநேகம் பெணகள சூழ இருப்பாள. ஒரு சுழி இடம் புரியானால தாய் மரணமாவாள; தான் வாழ்ந்திருப்பாள். மூன்று சுழி இடம்புரியானால் பிதா மரணமாம். அவள நூறு வயசு சுகமாயிருபபாள.

### பொது.

முன சொனன லட்சணமெல்லாம புருஷ லட்சணததிலே சில லட்சணம் பெண்களுக்கும புருஷருக்கும் ஒக்கும்.

அளந்து பார்க்கிற லட்சணம் எல்லாம இரண்டு வகை பார்க்கிறதும ஒக்கும். பெணகளுடைய லட்சணத்திலே சொன்ன மயிர் மறுவும் சுழிம் மறுவும் பெண்களுக்கும் புருஷருக்கும் சில ஒத்திருக்கும். எல்லோர் கண்ணும் காண இருக்கிற மடுவும் மறுவும் எல்லா லட்சணங்களும் மெத்தப பலியா. அவரவர்கள . காணாதிருக்கிறதிலும் மெத்தப பலியாது. தன கண்ணுக்கும் பிறர் கண்ணுக்கும காணபியாத லட்சணமெல்லாம் நன்றாய்ப் பலிக்கும்.

பெண்களுக்குப் பனிரெண்டு[1] வயதுக்குமேல் நாற்பது வயதுமட்டும்[2] எல்லா லட்சணமும் பார்த்தால் எல்லாம் ஒத்திருக்கும். புருஷனுக்குப் பதினாறு வயதுக்கு மேல் ஐம்பது வயதுமட்டும்[3] பார்த்தால் எல்லா லட்சணமும் ஒத்திருக்கும். இதுக்கு முன்னும் பின்னும் ஒவ்வாது. [இப்படிச்சொன்ன லட்சணம் எல்லாமுள்ள பெண்கள் முன்னே பத்து மாக கொத்தும் புருஷருக்கு ஒத்திருக்கும்.][4] எல்லா லட்சணமும் உள்ள பெண்கள் மற்றப் பெண்கள் ஆயிரம்போ எந்நேரமும் சூழ்ந்துகொண்டு இருப்பார்கள்.

(என்று) சுப்பிரமணிய சுவாமியார் ஸ்திரீ சாமுத்திரிகா லட்சணம் அகஸ்தியருக்குப் போதனையாகச் சொல்லியது.

முற்றும்.

---

[1] சில பிரதிகளிலே இந்த வயது 'ஒன்பது' என்று குறிக்கப்பட்டுள்ளது.

[2] சில பிரதிகளில் இந்த வயது 'ஐம்பது' என்று காணப்படுகிறது.

[3] 'எழுபத்தைந்து வயது மட்டும்' என்ற பாடமும் உண்டு.

[4] இந்தப்பகுதி விளங்கவில்லை.

[இவ்விதம் இல்லாமல், உன்னுக்கு மிகவும் நீண்டு நிமிர்ந்த உயர்ந்த பொன்னிறமாயிருந்தால் அன்னிய தேசம் எல்லாம் செல்வாள் ; அல்லாமல், கடினமாக இருந்தால் சோரர்களுடைய மனைவியாவாள் ; வெளுத்திருந்தால் விதவையாவாள் ; மிகவும் கறுத்திருந்தால் கணவனைப் பிரிந்து மிக்க துன்பத்தை அடைவாள்.]

46. இலகு பொற்கொடி மூக்கினையு
உள்சிறிது உயர்ந்துசேர்ந்து இயலெள்ளின்
மலரின் வண்ணமாய் நீண்டுதாழ்ந்
திராதுமேல் வரவர வுறநேர்ந்தது
நிலவு மென்துளை சிறுத்தஇரு
புறங்களு நேர்பெறச் சமனுகில்
உலக மியாவையும் கைதொழுது
ஏத்திடும் ஒண்மலர்த் திருவொப்பாள்.

[பொற்கொடி என விளங்கும் மாதர் மூக்கு, உள்ளே எலும்பு சிறிது உயர்ந்து, சிவந்து, எள்ளின் பூவைப்போல நீண்டு, தாழ்ந்திராமல், மேலே செல்லச் செல்ல மிகவும் குறுகி, நாசித்துவாரம் சிறுத்து இருபுறமும் ஒத்துச் சமமாக இருந்தால் எல்லா உலகும் வணங்கித் துதிக்கும் ஒளி வீசும் தாமரை மலரில் வசிக்கும் திருமகளை ஒத்திருப்பாள்.]

47. கருமை யாய்நுனி வளைந்துஇடை
பள்ளமாய்க் கவிழ்ந்துஅறப் பருத்தஓங்கி
அருண மாய்நுனி பருத்திடின்
கைம்மையாம் ; சிலதியாம் மடிப்புறருல ;
உருவு தேய்ந்துஅறக் குறுகிடின்
கலதியாம் ; உறுகவுள் சுரித்துஒண்பல்
தெரிவு றுதுகண் ணிடுக்குறுது
இளநகை செய்திடில் இனிதாமால.

[கருநிறம் உடையதாகவும், நுனி வளைந்தும், நடுவே பள்ளமாகவும் கவிழ்ந்தும், மிகவும் பூரித்தும், உயர்ந்தும், சிவந்தும், நுனி பருத்திருந்தாலும் விதவையாவாள் ; மடிப்பு ஆனால் குற்றேவல் புரியும் தோழியாவாள் ; உருவம் தேய்ந்து மிகவும் குறுகினால் மூதேவியாவாள் ; சிரிக்கும்போது கதுப்புச் சுழித்து ஒளிவாய்ந்த பல் தெரியாமலும் கண் இடுக்காமலும் இருந்தால் நன்மை பயப்பதாகும்.]

48. சொல்லு மாறுஅல்லது உறுநகை
புரிந்திடில் தோம்உறும் ; தும்முங்கால்
மெல்ல மெல்லென இருமுறை
மும்முறை தும்முதல் விதியாகும் ;
அல்ல தீர ; கண்மணிகறுத்து
இமைநறுத்த அயல்இடம் வெள்பாகிச்
சில அரிக்கடை செந்நடைய
குவளையின் செவ்விவாய்ந்த திடலதனரும்.

[மேலே சொல்லியவிதம் அல்லாமல் நகைபுரிவாளானால் குற்றம் அடைவாள்; தும்மும்போது மெல்ல மெல்ல இரண்டுதரம் மூன்றுதரம் தும்முதல் முறையாகும்; அல்லவாயின தீது; கண்ணில் மணி கறுத்து, இமையும் கறுத்து மணியைச் சுற்றிய பக்கத்து இடம் வெளுப்பாகி மெல்லிய செவ்வரி படர்ந்து, கடைக்கண் சிவந்து பசுமையான குவளை மலர்போல் செவ்வையாய் இருந்தால் நன்மையாகும்.]

49. கண்உ யர்ந்திடில் ஆயுள்போம்;
வட்டமேல் கலந்திடும் பலரோடும்;
அண்ணல் யானையின் கண்நிகர்
அமைந்திடில் அகற்றுதல் குணமாகும்;
வண்ண மெனப்புறு நிறமெனின்
நற்குணம் வாய்ந்திடாது; அறச்சேப்பின்
உணணுங் காதலன் உயிரினை;
அழுமேற் சிலதியாய் உழல்கிற்பாள்.

[கண் உயர்ந்திருந்தால் ஆயுள் போய்விடும்; வட்டமாக இருந்தால் பல ஆடவர்களோடு கூடுவாள்; பெருமை வாய்ந்த யானையின் கண்ணை ஒத்திருந்தால் அவளை விலக்கிவிடுதல் நல்லது; அழகிய புறவின் நிறமானால் நல்ல குணம் பெறமாட்டாள்; மிகவும் சிவந்தால் கணவன் உயிரைக் குடிப்பாள்; அழுந்திருக்குமாயின் குற்றேவல் புரியும் தோழியாகி வருந்துவாள்.]

50. ஆனைக்கண் ஒப்புறின் கல்வியில்
விழைவுறும்; ஆடுமே தியின்கண்ணே
போன்று மாறுகண் ஆகியும்
இருந்திடின் பொலிவிலள்; இடப்பாலின்
என்று நோக்குறின் சிலதியாம்;
வலப்புறத்து இயைந்திடின் மடியாகும்;
நான்ற தேனிறம் அமைந்திடில்
இருநிதி நண்ணிவாள் சிறப்பெய்தும்.

[பசுவின் கண்போல் இருந்தால் கல்வியில் விருப்பம் கொள்வாள்; ஆடு, எருமை ஆகியவைபோன்றிருந்தாலும், மாறுகண் ஆனாலும் பொலிவு பெறமாட்டாள்; இடப்பக்கம் சாய்ந்து பார்த்தால், குற்றேவல் புரியும் தோழியாவாள்; வலப்புறமானால் மடி; துளிக்கின்ற தேன் நிறம் பொருந்தினால் மிகுந்த செல்வம் பெற்று உயர்நிதி அடைவாள்.]

51. இமையின் மென்மையி பருத்தஅற
நேர்ந்திடாது எதிரொடும் கறுப்பெய்தின்
கண்மையும் நற்றிரு; பொன்மையாய்ப்
பருத்திட்ட இடைவெளி உற்றஆதா;

சமர்மு கத்துவில் போனறுஅற
மென்மையாயக் கருமைசார்ந்து எழிலாகி
உமிழ்க திர்க்கொடிப புருவம்மற்றென
றொடொனறு உருதெனின மிகநனரும.

[கண் இமையில மெல்லிய மயிா பருத்து மிகவும் குறுகாமல் அழகுடன் கறுத்திருநதால நல்ல செலவம சேரும; பொன நிறமாய்க கனத்து நடுநடுவே விலகி இருநதால ஆகாது; புருவம போாககளத்து வில போல வளைந்து மெனமையாகக கறுதது, அழகு பெறறு, இரணடுகளைப் பொழியும் கொடிபோல ஒனறோடு ஒன்று சேராமல இருநதால மகவும நல்லது.]

52. புருவ மெனமயிர் பருத்தநீணடு
இடையிடை அகனறு பொனனிறமாகி
விரவி ஒனறொடொனறு உற்றிடில்
அருந்துயா மேவும்; அம் செவிநாபபண
உருவ நனசுழி இருநதிடின
நனமக வுயிாத்திடும; உதிபபினறி
மருவு பனமயிர் நரமபுஎழுநது
உயாநதுமேல் வளைநதிடின தீதாமால.

[புருவத்தில உளள மெல்லிய ரோமம பருத்து நீணடு நடுநடுவே விலகிப் பொனனிறமாகி இருபுருவங்களும ஒனறோடு ஒனறு கலந்து இருநதால் கொடிய துனபம் அடைவாள; அழகிய காதின நடுவில அழகிய நல்ல சுழி இருநதால நற்புதலவரைப் பெறுவாள; தோற்றம் இல்லாமல் மயிா மிகுதியும சோந்து நரமபு தோனறி உயர்நது மேனோக்கி வளைந்திருந்தால் தீமையாகும.]

53. நெற்றி மூவிரல் அகலமாயச்
சினமயிர் நெறித்திடு நரமபினறிக்
குறற மினறிவெண் பிறையென
இருநதிடின குலவிய திருவெய்தும;
உற்ற சொத்திக ரேகைசோந
திடில்அவள உரியளமன னவர்க்கெனப;
நெற்றி நீளநரம் பொடுமயிா
அணிந்திடின சோருவள் பலரோடும.

[நெற்றி மூனறு விரல் அகலமாய், சிறுரோமங்களும் நெறித்திடும் நரம்பும் இலலாமல், குறறம் இல்லாமல், வெண்மையான பிறைச் சந்திரன போல் இருந்தால, செல்வம வநது அடையும்; சுவஸ்திகையின ரேகை பொருந்தியிருந்தால் அவள் அரசன தேவி எனபர்; நெடிய நரமபும் மயிரும் சேர்ந்திருந்தால் அவள பலரோடும கூடுவாள.]

54. ஒழுகி வார்ந்தொளிர் சீமந்த
ரேகை நன்கு உற்றிடின் சிறப்பெய்தும் ;
பழுதில் சென்னிமேல் உயர்ந்தணி
வட்டமாய அழகுறின் பலனெய்தும் ;
கழிய வீங்கிடின் விதவையாம் ;
நீளுமேல் காமுறும் பலர்பாலும் ;
எழில் அகன்றுஅற இருந்திடில்
யாவரும் இகழ்தர இரப்பாமால்.

[வரிசையாக நீண்டு அமைந்திருக்கும் சீமந்த ரேகை எனப்படும் மயிரின் வகிடு நன்றாகப் பொருந்தியிருந்தால் சிறப்பு அடைவாள் ; குற்றம் இல்லாத சிரசு மேலே உயர்ந்து அழகான வட்டவடிவாக இருந்தால் பலன் அடைவாள் ; மிகவும் பருத்தால் விதவையாவாள் ; நீண்டிருந்தால் பலர்மீதும் ஆசைகொள்வாள் ; அழகு இல்லாமல் இருந்தால் யாவரும் பழிக்கும்படி பிச்சை எடுப்பாள்.]

55. கரிய மையினை நாற்றென
வளர்ந்துமென் கடைகுழன்று அறநோக்கின
முருகு வாய்மடுத்த தனிநிறம
பூத்துற முறைமுறை நெறிப்பாகிப்
பெருகல் நீளுதல் குறுகுதல்
வளர்கடை பிளந்திடல் இவையன்றிப்
பொருவில் மேன்மையாய் நெறித்திடில்
அளிமலர்ப் பூங்குழல் இனிதாமால்.

[வண்டு மொய்க்கும் மலர் சூடும் கூழை கருமையான மையைப் பூசியது போல நீண்டு வளர்ந்து நுனி குழைந்திருந்தாலும், மிகவும் மெலிந்திருந்தாலும் தேன் குடிக்கும் வண்டின் நிறம்கொண்டு வரிசையாக நேராயிருந்தாலும், பெருகுதல், நீளுதல், குறுகுதல், வளர்கின்ற நுனி பிளவுபடுதல் ஆகியவை இல்லாமலும், சமானம் இல்லாத மேன்மை பெற்று நெறித்திருந்தாலும் இனியதாகும்.]

[நுனி பிளந்து, நடுவே விலகி, மிகவும் கடினமானதாகிக் குழைவு இல்லாமல, அழகில்லாமல செந்நிறம வாயநதம, பொன்னிறம் உடைய தாயும் இருநதால மிககக்கொடிய துனபம உண்டாகும ; நெற்றியிலே கொடிபோன்ற நீண்ட புருவத்தின நடுவே, சிவநத மறுவிருநதால கடல சூழ்ந்த பூமியைக் காக்கும அரசி ஆவாள்.]

57. இடப்பு றத்தில்நல் தழும்புமென
புளளிசேப்பு எயதிய மறுவுணடேல்
அடுக்கு நலதிரு ; வலமுலை
தனனிலதழும்பு அணிமறு உளதாகில
கடற்பு விக்குஒரு திலகமாம
புதலவனவேற கணணிய ரொருநால்வா
வடததின மெலலிலை நலலெழில
கவற்றிய வயிறுவாய்த திடுமனறே.

[இடப்பக்கத்தில நல்ல தழும்பு, மெல்லிய புள்ளி, சிவந்த மறு ஆகியவை இருநதால் நல்ல செலவம வரும ; வலது கொங்கையில வடு, அழகிய மறு ஆகியவை இருநதால, உலகத்துக்கு ஒரு திலகம போன்ற மகன, வேல போன்ற கண்ணையுடைய புததிரிகள நால்வா ஆகியோரை ஆலமரத்தின தளிர இலை போன்ற தன வயிற்றில பெறுவாள.]

58. சேநத நனமறு மூக்கினுள
நுதியிடைச் சேர்நதிடில உலகாளும ;
வேநதா நனமனைக மழததியாககு
அலலது மேவுரு முனசொனன
காந்து நனமறுக கறுப்பெனின
துயரொடும் கைம்மையாம ; அலதெனனின
தோயநத கேளவரைப பிழைததுஅலா
தூற்றிட எதிலா ரொடுமதோயும.

[சிவந்த நல்ல மறு மூக்கினுள்ளே முனையில பொருநதியிருந்தால பூமியை அரசு புரிவாள ; அரசன மனைவிக்கு அன்றி வேறு யாருக்கும் தோன்றாத ஒளி பொருந்திய இநத மறு கறுப்பாக இருந்தால் துன்பம் அடைநது விதவையாவாள ; இல்லையானால தன்னைக் கூடிய கணவனைக் குற்றம் செய்து பிறர் பழித்துத் தூற்றும்படி அன்னியரோடு கூடுவாள.]

59. இடப்பு றத்தவாய கைதனில
கழுத்தினில இருசெவி தனிலெற்று
கொடிற்றில் நனமறு வுணடத்தெனின
முனனர்நற் குமரனைப் பெறுகிறபாள் ;

62. கடிதொ டங்கிஎந்து அலகுலமட்டு
ஒருசுழி கிடநதிடில கணவனசேய்
முடிவர் ; மென்கடி முதலவயிறறு
அளவினும மொழிநதநீள் சுழிமேலின
உடைய காதலன இறந்திடும ;
ஆயிடைச் சுழியிரணடு உறுமாயின
வடுவில் கன்னியங் கறபழிநது
அலர்புனை வம்பலாககு இடனுகும்.

[கடிதடம் தொடஙகி எடுப்பான அலகுலமட்டும் ஒரு சுழி இருநதால் கணவனும் மக்களும் மரிபபா ; கடிதடம முதல வயிறு வரையில் அததகைய நீண்ட சுழி இருந்தால அவள் கணவன இறபபான ; அவ்விடம் இரண்டு சுழி இருநதால் அவள் கற்பழிநது அலர் தூற்றும் வமபர்க்கு இடமாவாள.]

63. கண்ணில் மெனசுழி யுடைத்தெனிற
கைம்மையாம ; அனறெனில் கற்பேகும் ;
நண்ணு மூக்கினில் சுழியுறில
கறபுறும ; நலஙகெழு செவிமீதில
வண்ண வார்குழல வகிாசசியில்
வலஞ்சுழி வதியின நாயகனஆவி
உண்ணும ; உச்சியில் ஒருசுழி
இருசுழி யுறறிடில கலனபோககும.

[கண்ணில் மெல்லிய சுழி இருநதால விதவை ஆவள ; அலலது கற்பு இழப்பாள் ; மூககில சுழியிருநதால கறபுடையவள ; நலம் நிறைந்த காதினமீதும, அழகிய கேசததின வடுவிலும் வலஞசுழி இருநதால் கணவன உயிரைக குடிபபாள ; உசசியிலே ஒரு சுழியோ இருசுழியோ இருநதால மங்கலியததை இழபபாள.]

64. நெற்றி மேல்வலஞ சுழியுறின
அவளதனை நீககுதல குணனுகும ;
முற்று மெனசுழி வலமஇட
மாய்பபிடர் எயதிடின ஓாஆணடில்
பெறற வினனுயிாக கேளவனை
இழநதிடும் ; பெட்பொடும துயில்போது
பறக றிததிடில பலபல
இலககணம பயிலினும் கொளலஆகா.

[நெறறியில் வலஞ்சுழியிருந்தால அவளை விலக்கிவிடுவது நன்கு ; மெல்லிய சுழி வலமாகவும இடமாகவும் கழுததில் இருந்தால் அவள் ஓர் ஆணடில் தன் உயிர்க்காதலனுன கணவனை இழப்பாள் ; அழகோடு துயிலும்போது பல்லைக்கடித்தால் வேறு நல்ல லட்சணங்கள் பல இருந்தாலும் அவளைக் கொள்ளுவது ஆகாது.]

65. அரையில் மென்சுழி உடையளேனும்
கன்னியாங் கற்பினுக்கு அயலாவாள்;
உரைசெய் நூல்முறை இலக்கணம்
அனைத்தையும் ஒருங்குவாய்ந் தனளேனும்
பொருவி னற்குணம் பொருந்துதல்
வேண்டு(ம்)மென் பூங்குழல் படைவாள்கண்
திருவ னார்களதம் இலக்கணம்
உரைத்தனம்; மணவினை தெரிகிறபாம்.

[அரையிலே மெல்லிய சுழியை உடையவள் அழகான கற்புக்கு அவள் கன்னியம் ஆவாள்; சாமுத்திரிக நூலில் கண்ட இலட்சணம் அனைத்தையும் பெற்றிருந்தாலும், ஒப்பற்ற நற்குணங்களையும் அடைந்திருத்தல் வேண்டும். மெல்லிய மலர் சூடிய கூந்தலையும், வாள் போன்ற கண்ணையும் பெற்ற லக்ஷ்மிபோன்ற மாதர்கள் இலக்கணம் இதுவரையில் சொன்னோம். மணம் செய்யும் முறையை மேலே கூறுவோம்.]

## பிர்சேர்கை-2

## வராஹமிஹிரர் இயற்றிய பிரஹத் ஸம்ஹிதை

## அறுபத்தெட்டாம் அத்தியாயம்

### புருஷ லட்சணம்

(1) சாமுத்திரிக லட்சணத்தை அறிந்த சமர்த்தன் முதலில் மனிதனுடைய உயரம், கனம், நடை, சரீர புஷ்டி, வலிமை, நிறம், எண்ணெய்க் கசிவு போன்ற பளபளப்பு, குரல், இயற்கைக் குணம், தோற்றத்தில் பிரதிபலிக்கும் சீலம், உடல் உறுப்புகள், உடற் காந்தி ஆகியவற்றைக் கவனித்து அவனுடைய கடந்த காலத்தையும் எதிர் காலத்தையும் சொல்லுகிறான்.

(2) அரசனுடைய பாதங்கள் வேர்வை யில்லாமலும், மிருதுவான உள்ளங்கால்களை உடையனவாயும், தாமரை மலரது உட்புறத்தின் காந்தியைப் பெற்றும், நெருங்கிய விரல்களையும், அழகிய சிவந்த நகங்களையும் உடையனவாயும், நன்கமைந்த குதிகால்களைப் பெற்றும், வெது வெதுப்பாகவும் நரம்பு எழாமலும் நன்றாக மறைந்த பரடுகளை அடைந்தும் ஆமை யோடு போன்ற புறவடி (பாதத்தின் மேற்பாகத்தை)ப் பெற்றும் இருக்கும்.

(3) பாதங்கள் முறம் போன்ற உருவம் கொண்டும், முரடாகவும், வெளுத்த நகங்களைப் பெற்றும், வளைந்து கோணலாகவும், நரம்பு நிறைந்தும், நனைவு உலர்ந்தும், விரல்கள் விலகியனவாகவும் இருந்தால் வறுமைத் துன்பத்தைக் கொடுக்கும். நடு உயர்ந்து பெரிய பாதங்களானால் வழி நடக்கவேண்டும். கஷாய நிறமானால் வமிச நாசம் ஏற்படும். உள்ளங்கால் சுட்ட மண் நிறமானால் பிரமஹத்தி செய்வான். மஞ்சள் நிறமானால் கூடத்தகாத பெண்டிருடன் கூடுவான்.

(4) கணைக்கால்கள் திரண்டும், அடர்த்தியற்ற மெல்லிய ரோமங்களை யுடையனவாகவும், தொடைகள் யானைத் துதிக்கைபோலவும், முழங்கால்கள் பருத்து, ஒன்றையொன்று ஒத்தும் இருந்தால் அவன் அரசனாவான். கணைக்கால்கள் நாய், குள்ளநரி ஆகியவற்றினுடையவைகளைப்போல் இருந்தால் செல்வம் இல்லாதவன்.

(5) அரசனுக்கு (உடலில்) மயிர்க்கால் ஒவ்வொன்றிலும் ஒரு ரோமம் இருக்கும். வேதம் வல்லார்களுக்கும் சான்றோர்களுக்கும் ஒரு காலில் இரண்டு ரோமம் இருக்கும். மூன்றும் அதற்கு மேலும் இருந்தால் அவர்கள் வறுமையையும் துன்பத்தையும் அடைவர். தலையிலும் இம் மாதிரியே நன்மையாகவும் தீமையாகவும் இருக்கும்.

(6) முழங்கால் சதைப் பற்று இல்லாமல் இருந்தால் அவன் பிற நாட்டிலே இறப்பான். சிறியதாக இருந்தால் சௌபாக்கியம் உண்டாகும். அகன்று விகாரமானால் தரித்திரன் ஆவான். தாழ்ந்திருந்தால் பெண்டிர் அவனை வெற்றி கொள்வர். சதைப்பற்றுக் கொண்டிருந்தால் அரசுரிமை கிட்டும். பருத்திருந்தால் நீண்ட ஆயுள் அடைவான்.

(7) லிங்கம் பருத்திருந்தால் தனவான் ஆவான்; பருத்திருந்தால் பிள்ளையில்லாதவன்; இடது பக்கம் சாய்ந்திருந்தால் செல்வம் குறைவு. கோணலாக இருந்தால் செல்வம், புத்திரப்பேறு இல்லாதவன். கோணலாக இல்லாவிட்டால் பிள்ளைப் பேறு உடையவன். கீழ் நோக்கானால் வறுமை. நரம்பு எழுந்திருந்தால் புத்திர பேறு குறைவு. நுனி மூடியதுபோல பருத்திருந்தால் சுகத்தை அடைவான். மிருதுவாகில் மேகரோகம் போன்றவை ஏற்படும்.

(8) உரையால் மூடியது போன்ற லிங்கமானால் அரசன் ஆவன். நீண்டிருந்தாலும் வளைந்திருந்தாலும் செல்வம் அற்றவன். நேராகவும் உருண்டும் இருக்குமானாலும், மென்மையான நரம்பு எழுந்திருந்தாலும் தனவான் ஆவான்.

(9) ஒற்றைப் பீஜம் உடையவன் நீரில் மரிப்பான். ஒன்றுக்கொன்று வித்தியாசமாக இருந்தால் பெண்களிடம் சபலம் கொண்டவன்; இரண்டும் சரியாக இருந்தால் அரசன்; மேல் இழுத்துக்கொண்டிருந்தால் அற்பாயுசு; தொங்குபவையானால் நூறு வயது இருப்பான்.

(10) மணி சிவந்திருந்தால் செல்வம் நிறைந்தவன்; வெளுத்தும் கறுத்தும் இருந்தால் பொருள் அற்றவன். சிறுநீர் ஓசையுடன் விழுந்தால் சுகம் அனுபவிப்பான்; ஓசையில்லாதிருந்தால் வறுமை.

(11) சிறுநீர் வலம்புரியாக இரண்டு மூன்று நான்கு தாரைகளாக விழுந்தால் அரசன் ஆவான். சிதறி விழுவதானால் செல்வம் அற்றவன்.

(12) சிறுநீர் ஏகதாரையாகச் சுழன்று விழுந்தால் மிகுந்த அழகோடு புத்திரன் அடைவான்* மணி உயர்ந்து சமமாக இருந்தால், அவன் செல்வம், பெண்டிர், ரத்தினம் ஆகியவற்றை அடைவான்.

(13) மணி நடுவில் தாழ்ந்து இருந்தால், பெண்களையே பெறுவான்; அதனோடு வறுமையும் உறுவான்; நடுவில் உயர்ந்திருந்தால், காலநடைச் செல்வம் மிகுந்தவன்; தடித்திருந்தால் வறுமை.

(14) சிறுநீர்த்துவாரம் நன்கு உலர்ந்திருந்தால், செல்வம் இல்லாதவனாகவும், குரூபியாகவும் இருப்பான். சுக்கிலம் மலர்போன்று நறுமணம் வீசினால் அரசனாவான்.

(15) சுக்கிலம் தேன் மணம் கமழ்ந்தால் மிகுந்த பணக்காரனாக இருப்பான்; மீன் நாற்றம் கொண்டிருந்தால் அநேகம் பிள்ளைகள் பிறப்பர். நீர்த்து (தடிப்பு இல்லாமல்) இருந்தால் பெண் குழந்தைகளை அடைவான்; இறைச்சி நாற்றம் கொண்டிருந்தால் வெகுபோகி.

(16) சுக்கிலம் சாராய நாற்றம் வீசினால் யாகம் செய்வான்; உவர் நாற்றமானால் வறுமை எய்துவான். சீக்கிரமாய்ப் போகம் செய்பவன் நீண்ட ஆயுள் உடையவன்; அவ்விதம் இல்லாதவன் அற்பாயுசு கொண்டவன்.

* வேறு பாடத்தின்படி 'நல்ல அழகு வாய்ந்தவன். ஆனால், புத்திர பாக்கியம் இல்லை' என்று ஆகும்.

(17) பிருஷ்டபாகம் (குத்தாம்பட்டை) மிகவும் பருத்திருந்தால் வறுமை அடைவான் ; சதைப்பற்றுடன் சமமாக இருந்தால் இன்பம் அனுபவிப்பான் ; பாதி அளவே இருக்குமாயின் நோயால் பீடிக்கப்படுவான் ; தவளையினுடையதைப்போல் இருக்குமானால் அரசனாவான்.

(18) இடை (கடி) சிங்கத்தினுடையதைப்போல் இருந்தால் அரசனாவான் ; குரங்கு, ஒட்டகம் ஆகியவற்றின் இடையை ஒத்திருந்தால் செல்வம் நீங்கியவன் ஆவான் ; அடி வயிறு (மேடு பள்ளம் இல்லாமல்) சமமானதாக இருந்தால் சுகம் அனுபவிப்பான் ; குடம், தட்டு ஆகியவை போலானால் ஏழையாவான்.

(19) வில் குரங்கினைச் சதைப்பற்றுடன் இருந்தால் பணக்காரன் ஆவான் ; பள்ளமாகவும் கோணலாகவும் இருந்தால் வாழ்க்கையின்பத்தை அனுபவிக்கமாட்டான் ; மேடு பள்ளம் இல்லாமல் சமமான வயிறு ஆனால் போகத்தை நன்கு அனுபவிப்பான் ; தாழ்ந்திருந்தாலோ போகம் இல்லாதவன் ஆவான்.

(20) (மேல்) வயிறு உயர்ந்திருந்தால் அரசன் ஆவான் ; சமமாக இல்லாத மனிதர்கள் வக்கிர சுபாவத்தைப் பெற்றிருப்பர் ; பாம்பின் வயிற்றைப்போல (நீண்டு மெலிந்து) உடையவர்கள் வறுமையால் வாடுவர் ; அதனோடு பெருந்தீனிக்காரர்களாகவும் இருப்பர்.

(21) வட்டமாகவும், உயர்ந்தும், அகன்றும் உள்ள தொப்புளை உடையவர்கள் சுகத்தை அனுபவிப்பர் ; சிறியதும் கண்ணுக்குப் புலப்படாததும் (தாழ்ந்தும்) ஆழமாகவும் உள்ள தொப்புளை உடையவர்கள் துக்கத்தை அனுபவிப்பர்

(22) கோட்டின் நடுவில், அதாவது சதைமடிப்பின் நடுவில், உள்ளதோ, சரியாக இல்லாமல் மாறுக அமைந்ததோ உள்ள தொப்புள் சூலை (வயிற்று வலி) நோயையும், வறுமையையும் காட்டும். இடஞ்சுழியாக இருந்தால் வஞ்சகனாவான். வலஞ்சுழியானால் புத்திசாலியாவான்.

(23) தொப்புள் பக்கவாட்டில் அகன்று அமையக்கொண்டவன் நீண்ட ஆயுளை உடையவன் ; மேற்புறமாக அகன்றிருந்தால் அரசனாவான் ; கீழ்ப்புறமாக இருந்தால் (ஆநிரை) பசுச்செல்வம் நிறைந்தவன். தாமரையின் காய்போன்ற காந்தியையுடையதானால் அவன் அரசனாவான்.

(24) வயிற்றிலே சதைமடிப்பு ஒன்றையுடையவன் ஆயுதத்தால் மரணம் அடைபவன். இரண்டு இருக்குமானால் ஸ்திரீபோகம் உடையவன். மூன்றானால் ஆசிரியனாவான். நான்கானால் அநேக புத்திரர்களை அடைவான் சதைமடிப்பே இல்லாதவன் அரசனாவான்.

(25) அந்த மடிப்பு கோணலாக இருந்தால், அவன் சோத்தகாத மாதருடன் கூடுவான் ; பாவியுமாவான். அது நேராக (சரியாக) இருக்குமானால் அவன் அயல் மாதரை வெறுப்பவனாவான்.

(26) விலாபக்கம் சதைப்பற்றுடன் மிருதுவாகவும், வலஞ்சுழியான ரோமங்களைப் பெற்றுமிருந்தால் அவன் அரசனுவான். இதற்கு மாருக (அதாவது விலாபக்கம் சதைப்பற்று இல்லாமலும் சொரசொரப்பாகவும் இடஞ்சுழி ரோமங்களையுடையதாகவும்) இருந்தால் அவன் சுகத்தை அடையாமல் வறுமையுடன் பிறருக்கு அடிமையாவான்.

(27) உயர்ந்து இல்லாமல் உள்ள மார்புக்காம்பை உடையவர்கள் பாக்கியசாலிகள். ஒன்றையொன்று ஒவ்வாமல் நீண்டவைகளாக உள்ளவர்கள் வறுமையில் உழல்வர். பருத்தோ உயர்ந்தோ அழுந்தியோ உடையவர்கள் அரசர்களாகவும் சுகத்தை அனுபவிப்பவராகவும் ஆவர்.

(28) மார்பு உயர்ந்து பருத்து உறுதியானதாகச் சதைப்பற்று மிகுந்ததாகவும் உள்ளவர் அரசராவர். விகாரமான மயிர் நிறைந்து நரம்புடன் கூடியதாக உள்ள மார்பையுடையவர் அதமர் ஆவர்.

(29) மார்பு சமமாக உள்ளவன் செல்வந்தனுவான். பருத்த மார்பையுடையவன் வீரன் ஆவான்; குறுகியிருந்தால் வறுமை எய்தும். சரியாக இல்லாமல் (மேடு பள்ளங்களாக கோணலோ கோணலாகவோ) இருந்தால் ஆயுதத்தால் மரணம் அடைவான்.

(30) (ஜத்ரு = தோளும் கழுத்தும் சேரும் இடம்) பிடரி ஒன்றோடொன்று ஒத்திராமல் உள்ளவன் கொடியவன். தோள் எலும்பு கூடும் சந்தி அகலமாக இருந்தால் பொருள் அற்றவன்; வறியன். உயர்ந்திருந்தால் போகத்தை அனுபவிப்பவன்; தாழ்ந்திருந்தால் தரித்திரம். பருத்து இருந்தால் பொருள் உடையவன்; செல்வந்தன்.

(31) கழுத்து தட்டையாகவோ, சதைப் பற்று இன்றி உலர்ந்து நரம்புடைத்தோ உள்ளவன் தரித்திரன். எருமையின் கழுத்தைப் போன்ற கழுத்துள்ளவன் வீரன், காளையின் கழுத்தைப் போன்றுள்ளவன் ஆயுதத்தால் உயிர் துறப்பான்.

(32) கழுத்து சங்கு போல் இருந்தால் அரசன் ஆவான்; தொங்கும் கழுத்தை உடையவன் நன்ருகச் சாப்பிடுவான் (பெரு வயிறன்); முதுகு வளைவில்லாமலும் புறமயிர் இல்லாமலும் இருந்தால் அவன் பொருள் உடையவன். இதற்கு மாருக இருந்தால் கெடுதல்.

(33) அக்குள் வேர்வையில்லாமல் பருத்து உயர்ந்து சமமாக அமைந்து நறுமணம் உடையதாகவும், மயிர் அடர்ந்ததாகவும் இருந்தால் அவன் செல்வம் படைத்திருப்பான். இதற்கு மாருக இருந்தால் பொருள் இல்லாதவன்; வறியன்.

(34) கழுத்து, தசை (மாம்சம்) இல்லாமலும் மயிர் அடர்ந்தும் வளைவாகவும் குட்டையாகவும் (சிறுத்தும்) இருந்தால் பொருள் அற்றவன் ஆவன். விசாலமாகவும், உயர்ந்தும், தோளோடு நன்கு பொருந்தியும் இருந்தால் செளகரியத்தையும் வீரியத்தையும் (வலிமையையும்) அளிக்கும்.

(35) கைகள் ஒன்றை யொன்று ஒத்து, திரண்டு, பருத்து, யானைத் துதிக்கை போல் முழங்கால் வரை தொங்கினால் அவற்றையுடையவன் அரசனுவான். குறுகி மயிரடர்ந்து இருப்பவன் கீழ்ப்பட்டவன் (அதமன்) ஆவான்.

(36) கை விரல்கள் நீண்டிருந்தால் நீண்ட ஆயுளைக் கொடுக்கும். விரல்களிலே சதை மடிப்பு இல்லாமல் இருந்தால் பாக்கியவான் ஆவான். மெலிந்த விரல்களையுடையவன் மேதாவி. தட்டையாயிருந்தால் பிறருக்கு அடிமைப்பட்டு வாழ்வான்.

(37) பருத்த விரலானால் செல்வம் இல்லை; வெளிப்புறமாக வளைந்த விரலானால் ஆயுதங்களால் மரணம் அடைவன். குரங்கின் கையைப் போல அமைந்திருந்தால் தனிகன், செல்வம் உள்ளவன். புலியினுடையதைப் போல இருந்தாலோ பாவியாவான்.

(38) மணிக்கட்டு வெளியில் தெரியாமல் மறைந்தும் திடமாகவும் நன்ருகக் கூடியுள்ள பூட்டை உடையதாகவும் இருந்தால் அரசனுவான்; இந்த இலக்கணத்தில் குறைந்தால் கைக்குச் சேதம் உண்டாகிறது. தளர்ந்தும் சப்தத்தோடு கூடியிருந்தாலும் (நெட்டை முறித்தாலும்) பொருள் அற்றவன் ஆவன். ,

(39) உள்ளங்கை ஆழ்ந்திருந்தால் தந்தையின் பொருள் (பித்ரார்ஜித சொத்து) கிட்டாது. உருண்டு பள்ளமாக இருந்தால் பொருள் உடையவர்கள். நன்கு மேடான உள்ளங்கையை உடையவர்கள் வள்ளல்கள் ஆகி வழங்குவர்.

(40) உள்ளங்கைகள் ஒன்றையொன்று ஒத்திராமல் இருந்தால் கொடியவனுகவும் தரித்திரனுகவும் ஆவான். சிவந்திருந்தால் அரசன்; மஞ்சள் நிறமாயிருந்தால் அடையத்தகாத மங்கையரைப் புணருபவன். மழமழப்பு இல்லாத உள்ளங்கையனுல் பொருள் செல்வம் அற்றவன்.

(41) நகம் உமிபோல இருந்தால் நபும்சகன்; தட்டையாகவோ பிளந்தோ இருந்தால் பொருள் இழந்தவன் (தரித்திரன்); சொத்தையாகவோ நிறம் குலைந்தோ இருந்தால் பிறருக்கு அடிமையாக (நூல் வேலை செய்பவனுக) இருப்பான். சிவந்திருந்தால் அரசனுவான்.

(42) பெரு விரலில் யவ-தானியம் போன்ற ரேகை இருந்தால் பணக்காரன். பெருவிரலின் அடிப்புறத்தில் உள்ளவை புத்திர பாக்கியத்தைக் காட்டும். விரல் இறை (கணு) நீண்டிருந்தால் பாக்கியவானுகவும் தீர்க்காயுள் உடையவனுகவும் இருப்பான்.

(43) கைரேகைகள் ஆழ்ந்து அழகாக (பளபளப்பாக) இருந்தால் செல்வம் உள்ளவன் ஆவான். அவ்விதம் இல்லாதபோனுல் தரித்திரம். விரல்கள் நெருங்கியிராமல் இருந்தாலும் ஏழைமை; பருத்து நெருங்கியிருந்தால் செல்வம் மிகுந்து வாழ்க்கையில் சிறந்து விளங்குவான்.

(26) விலாப்பக்கம் சதைப்பற்றுடன் மிருதுவாகவும், வலஞ்சுழியான ரோமங்களைப் பெற்றுமிருந்தால் அவன் அரசனாவான். இதற்கு மாறாக (அதாவது விலாப்பக்கம் சதைப்பற்று இல்லாமலும் சொரசொரப்பாகவும் இடஞ்சுழி ரோமங்களையுடையதாகவும்) இருந்தால் அவன் சுகத்தை அடையாமல் வறுமையுடன் பிறருக்கு அடிமையாவான்.

(27) உயர்ந்து இல்லாமல் உள்ள மார்புக்காம்பை உடையவர்கள் பாக்கியசாலிகள். ஒன்றையொன்று ஒவ்வாமல் நீண்டவைகளாக உள்ளவர்கள் வறுமையில் உழல்வர். பருத்தோ உயர்ந்தோ அழுந்தியோ உடையவர்கள் அரசர்களாகவும் சுகத்தை அனுபவிப்பவராகவும் ஆவர்.

(28) மார்பு உயர்ந்து பருத்து உறுதியானதாகச் சதைப்பற்று மிகுந்ததாகவும் உள்ளவர் அரசராவர். விகாரமான மயிர் நிறைந்து நரம்புடன் கூடியதாக உள்ள மார்பையுடையவர் அதமர் ஆவர்.

(29) மார்பு சமமாக உள்ளவன் செல்வந்தனாவான். பருத்த மார்பையுடையவன் வீரன் ஆவான்; குறுகியிருந்தால் வறுமை எய்தும். சரியாக இல்லாமல் (மேடு பள்ளங்களைக் கொண்டோ கோணலாகவோ) இருந்தால் ஆயுதத்தால் மரணம் அடைவான்.

(30) (ஜத்ரு = தோளும் கழுத்தும் சேரும் இடம்) பிடரி ஒன்றோடொன்று ஒத்திராமல் உள்ளவன் கொடியவன். தோள் எலும்பு கூடும் சந்தி அகலமாக இருந்தால் பொருள் அற்றவன்; வறியன். உயர்ந்திருந்தால் போகத்தை அனுபவிப்பவன்; தாழ்ந்திருந்தால் தரித்திரம். பருத்து இருந்தால் பொருள் உடையவன்; செல்வந்தன்.

(31) கழுத்து தட்டையாகவோ, சதைப் பற்று இன்றி உலர்ந்து நரம்புடைத்தோ உள்ளவன் தரித்திரன். எருமையின் கழுத்தைப் போன்ற கழுத்துள்ளவன் வீரன்; காளையின் கழுத்தைப் போன்றுள்ளவன் ஆயுதத்தால் உயிர் துறப்பான்.

(32) கழுத்து சங்கு போல் இருந்தால் அரசன் ஆவான்; தொங்கும் கழுத்தை உடையவன் நன்றாகச் சாப்பிடுவான் (பெரு வயிறன்); முதுகு வளைவில்லாமலும் புறமயிர் இல்லாமலும் இருந்தால் அவன் பொருள் உடையவன். இதற்கு மாறாக இருந்தால் கெடுதல்.

(33) அக்குள் வேர்வையில்லாமல் பருத்து உயர்ந்து சமமாக அமைந்து நறுமணம் உடையதாகவும், மயிர் அடர்ந்ததாகவும் இருந்தால் அவன் செல்வம் படைத்திருப்பான். இதற்கு மாறாக இருந்தால் பொருள் இல்லாதவன்; வறியன்.

(34) கழுத்து, தசை (மாம்சம்) இல்லாமலும் மயிர் அடர்ந்தும் வளைவாகவும் குட்டையாகவும் (சிறுத்தும்) இருந்தால் பொருள் அற்றவன் ஆவன். விசாலமாகவும், உயர்ந்தும், தோளோடு நன்கு பொருந்தியும் இருந்தால் சௌக்கியத்தையும் வீரியத்தையும் (வலிமையையும்) அளிக்கும்.

(52) உதடு வெடித்தோ, துண்டிக்கப்பட்டோ (அறுந்தோ), நிறம் அற்றோ, மாறியோ, குரூரமாகவோ இருந்தால் பொருள் அற்றவர் ஆவார். அழகு வாய்ந்து நெருங்கி மிகவும் கூர்மையாக உள்ள கோரைப் பற்களும் சமமாக வரிசையாக உள்ள பற்களும் நன்மை பயக்கும்.

(53) நாக்கு சிவந்து நீண்டு மெலியதாகவும் பொருத்தமானதாக (சமமானதாக)வும் இருந்தால் சுகத்தை நல்கும். வெளுத்தோ, கறுத்தோ, பருத்தோ (உலர்ந்து குரூரமாகவோ) இருந்தால் பொருள் அற்றவன் ஆவான். (தவடையும்) கன்னமும் அப்படியே.

(54) நன்கு பொருந்தி மூடும் வாயைப் பெற்று அழகாகவும் அழுக்கற்று (குற்றம் இல்லாமல்), சமமாக (கோணல் இல்லாமல்) உள்ள முகம் அரசர்க்கு உரியதாகும். இதற்கு மாறாக அமைந்திருந்தால் துக்கத்தை அனுபவிப்பார்கள். மிகப்பெரிய முகத்தைப் பெற்றவர்கள் பாக்கியமில்லாதவர்கள் ஆவர்.

(55) பெண் முகத்தைப் பெற்றவர்களுக்குக் குழந்தை இல்லை. வட்டவடிவமான முகம் கபடிகளுக்கு ஆகும்; நீண்ட முகம் ஏழ்மையைக் குறிக்கும். பெண் முகத்தைப் பெற்றவர்கள் பாபத்தொழிலைச் செய்வார்கள்.

(56) தூர்த்தர் (மோசக்காரர்) களுடைய முகம் சதுரமாக இருக்கும்; பிள்ளை இல்லாதவர்களுக்குத் தாழ்ந்து (பள்ளமாக) இருக்கும்; லோபிகளுக்கும் (பொருள் அற்றவர்களுக்கும்) மிகக் குறுகலாக இருக்கும். போகிகளுக்கு நிறைந்து அழகாகக் காணப்படும்.

(57) மீசை மயிர் நுனிபிளவாமல் வழுவழுப்பாகவும், மிருதுவாகவும், வணக்கமாகவும் இருந்தால் சுபத்தை அளிக்கும். சிவந்தோ, விகாரமாகவோ, அற்பமாகவோ இருக்குமானால் அவர்கள் திருடர்கள் என்று அறிக.

(58) காது சதைப்பற்று இல்லாமல் இருந்தால் பாபத்தினால் மரணம் அடைவர். சப்படையான காது வெகுபோகங்களை அளிக்கும். சிறியதாகக் குறுகிய காதை உடையவன் கிருபணன் (தரித்திரன்). இரும்பு முளை போன்ற காது உள்ளவர் அரசர் ஆவர்.

(59) காதில் மயிர் உள்ளவர் நீண்ட ஆயுளை உடையவர். விசாலமான காது செல்வத்தை அளிக்கும். நரம்புமிகுந்து தோன்றும் காதை உடையவர் கொடியவர் (குரூரர்). சதைப் பற்றுமிகுந்தோ நீண்டு தொங்குவதாகவோ உள்ள காது வாய்ந்தவர் நல்ல சுகத்தை அனுபவிப்பர்.

(60) கன்னம் தாழ்ந்து பள்ளமாக இராமல் (மேடாக இருந்தால்) போகத்தை அளிக்கும். சதைப்பற்று மிகுந்த கன்னத்தை உடையவன் மந்திரி ஆவான். சிங்கத்தின் போன்ற முகத்தை உடையவன் சுகத்தை அடைவான். வற்றி இருந்தாலும் (சுருங்கி) நீண்ட ஆயுளை அடைவான்.

(44) மணிக்கட்டிலிருந்து தொடங்கி உள்ளங்கையை அடையும் மூன்று ரேகைகள் உள்ளவன் அரசனாவான். மீன் போன்ற இரண்டு ரேகைகள் இருந்தால் அவன் யாகங்களைச்செய்து எப்போதும் அள்ளி வழங்குபவனாக இருப்பான்.

(45) வச்சிராயுதம் போன்ற ரேகையானால் செல்வம் உடையவன். மீன்வால் போன்ற ரேகையானால் வித்தை அடைவான். சங்கரேகையானால் அரசன். குடை, பல்லக்கு, யானை, குதிரை, தாமரை ஆகியவை போன்ற ரேகைகளும் சமமான பலனை (அரச பதவியை) அளிக்கும்.

(46) குடம், தாமரைத்தண்டு, வெற்றிக்கொடி (பதாகை), அங்குசம் இவை போன்ற ரேகையுடையவர்கள் குபேர சம்பத்து உள்ளவர்கள். மாலை போல் ரேகை இருந்தால் பணக்காரன். ஸ்வஸ்திகை உருவமானால் ஐசுவரியம் பெருகும்.

(47) சக்கரம், கத்தி, கோடரி, தோமராயுதம், சக்தி, வில், ஈட்டி ஆகியவை போன்ற ரேகைகள் இருந்தால் சேனாதிபதிகளாக (வீரர்களாக) ஆவர். உரல் போன்ற உருவத்தைப்பெற்ற ரேகை உள்ளவர் விதிப்படி யாகம் செய்பவராவர்.

(48) மகரம், துவசம் (கொடி), பொக்கிஷம் இவை போன்ற ரேகைகளையுடையவர்கள் [இந்தப் பகுதியை வேறு விதமாகவும் பொருள் கொள்ள முடியும். மகரக்கொடியை உடைய மன்மதன் பொக்கிஷமான யோனி போன்ற ரேகை உள்ளவர்கள்] பெருஞ்செல்வத்தைப் பெற்றிருப்பர். பெருவிரல் அடியில் யாகவேதி போன்ற உருவத்தையுடைய பிரம்ம தீர்த்தம் எனப்பெறும் ரேகை இருந்தால் அக்நிஹோத்திரம் செய்தவராவர்.

(49) முக்கோண வடிவமான ரேகையுள்ளவர்கள் குளம், கோயில் முதலியவற்றை நிர்மாணித்துத் தருமம் செய்பவர். பெருவிரலின் அடியில் உள்ள ரேகைகள் பிள்ளைகளைக் குறிக்கும். மெல்லிய ரேகைகள் பெண்கள் ஆகும்.

(50) பெருவிரலுக்குப் பக்கத்து விரலான சுட்டுவிரலை அடையும் ரேகை நூறு வயதைக் குறிக்கும். குறைந்தோ நடுவில் அறுந்தோ இருந்தால் மரத்திலிருந்து விழுவதைக் கற்பனை செய்யவேண்டும். (மரத்திலிருந்து விழுந்து உயிர் துறப்பர் என்றோ வயது குறையும் என்றோ கொள்ளலாம்.) அதிகமான ரேகைகள் இருந்தாலும், ரேகைகளே இல்லாவிட்டாலும் தரித்திரம்.

(51) மோவாய் மிகவும் குறைவாக (மெலிந்து) நீண்டிருந்தால் தரித்திரம்; பொருள் அற்றவன் ஆவான். சதைப்பற்றுடன் கூடியிருந்தால் தனம் மிகுந்தவன் ஆவான். கோணல் இல்லாமல் கோவைப் பழத்தை ஒத்த (சிவந்த) உதடு வாய்ந்தவர்கள் அரசராவர். சிறுத்திருந்தால் வறுமை.

(70) உயர்ந்து அகன்ற நெற்றிப் பூட்டை உடையவர்கள் செல்வம் மிகுந்தவர்; பள்ளமாக இருந்தால் செல்வம் இராது; பிள்ளைகளும் இல்லை. நெற்றி மேடுபள்ளமாக இருந்தால் பொருளற்றவர்; பாதிச் சந்திரன் போன்றிருந்தால் தனவான்.

(71) முத்துச் சிப்பிபோல நெற்றி விசாலமாக இருந்தால் ஆசாரியர் ஆவர். நரம்பு நிறைந்து இருந்தால் அதர்மத்தில் இச்சையுள்ளவர். ஸ்வஸ்திகை போன்ற உருவங்களில் நரம்பு புடைத்திருந்தால் செல்வம் நிறைந்தவர் ஆவர்.

(72) தாழ்ந்த நெற்றியை யுடையவர்கள் சிறைப்படுவர்; கொலை நிமித்தமும் ஏற்படும்; கொடிய தொழிலிலும் இச்சை கொள்வர்; உயர்ந்த நெற்றியானால் அரசர் ஆவர்; நெருங்கியிருந்தால் கிருபணன் ஆவன்.

(73) ஒருவனுடைய அழுகை தீனமாக இல்லாமலும், கண்ணீர் இல்லாமலும் அழகாகவும் இருக்குமானால் அது அவனுக்கு நன்மை பயக்கும். தீனமாகவும் அதிகக் கண்ணீரை உடையதுமான அழுகை நன்மை அளிக்காது.

(74) நடுக்கமற்ற சிரிப்பு நன்மை பயப்பதாகும்; கண்ணை மூடிக் கொண்டு சிரிப்பவன் பாவி; சந்தோஷம் உள்ளவனுக்கும், வைத்தியக் காரனுக்கும் சிரிப்பு அடிக்கடியும் புன் சிரிப்பாகவும் ஏற்படும்.

(75) நெற்றியிலே நீண்ட ரேகைகள் மூன்று இருந்தால் அவன் நூறு ஆண்டு வாழ்ந்திருப்பான். நான்கு ரேகைகள் இருந்தால் அரசப் பதவியுடன் தொண்ணூற்றைந்து ஆண்டு வாழ்வான்.

(76) அறுந்து போன ரேகையானால் புணரத்தகாத மாதரைக் கூடுவான்; ரேகையே இல்லாவிட்டால் தொண்ணூறு வயது வாழ்வார். ரேகை இரு புறமும் கேசத்தைத் தொடுமானால் எண்பது வயது வரை வாழ்வார்.

(77) ஐந்து ரேகையானால் எழுபது வயது; ஆறு ஆனால் அறுபது; அதிகமான ரேகைகளானால் ஐம்பது; கோணலாக வளைந்திருந்தால் நாற்பது வயது.

(78) ரேகை புருவத்தைத் தொட்டிருந்தால் முப்பது வயது; இடது புறம் வளைந்திருந்தால் இருபது; சிறு ரேகைகளானால் அற்பாயுசு; (இன்னும்) குறுகியிருந்தால் அதற்கு ஏற்றவாறு ஆயுள் அமையும்.

(79) உருண்டை வடிவான தலையையுடையவன் ஆதிரைச் செல்வம் அடைந்தவன் ஆவான். குடை போன்ற வடிவம் ஆனால் அரசன்; சப்பட்டையானால் பெற்றோர்களைக் கொல்பவன்; எறும்பு பருத்த தலையானால் நீண்ட காலம் உயிர் வாழ்வான்.

(61) அறுந்ததுபோன்ற உருவத்தைப் பெற்ற மூக்கு உடையவன் புணரத்தகாத மாதரை அடைவான். நீண்ட மூக்கானால் செல்வம். நன்கு வளைந்திருந்தால் திருடன் ஆவான். சப்பையாக இருந்தால் மங்கையரால் மரணம் எய்துவான்.

(62) மூக்கின் நுனி கோணியிருந்தால் (வளைந்திருந்தால்)பெரும் பணக்காரன். வலது பக்கமாக வளைந்திருந்தால் அதிகமாகச் சாப்பிடுகிறவன்; கொடியவன். நேராகவும், சிறுதுவாரங்களைப் பெற்றும், அழகாகவும் உள்ள நாசி பாக்கியத்தை அளிக்கும்.

(63) தும்மும்போது தும்மல் இரண்டு மூன்று சேர்ந்து (தொடர்ச்சியாகப்) பலத்த சப்தத்துடன் வெளிப்பட்டுப் பிறகு எதிர் ஒலித்தால் அவன் பணக்காரன் ஆவான். தும்மல் ஒன்றோடு ஒன்று சேராமலும் கெட்டியாகவும் இருந்தால் நீண்ட ஆயுளை உடையவன்.

(64) தாமரை இதழின் (காந்தியை) அழகை உடைய கண்களைப் பெற்றவர் தனிகர்; சிவந்த கடையோடு கூடிய கண்களைப் பெற்றவர் செல்வத்தை அடைவர்; தேன்போன்ற பொன்னிறம் வாய்ந்த கண்ணை அடைந்தவர் மிகப்பெரும் பணக்காரர். பூனைக் கண்ணை உடையவர் பாவிகள் ஆவர்.

(65) பச்சை, (மஞ்சள்), வெண்மை கலந்த நிறத்தை உடைய கண்ணைப் பெற்றவரும், வட்டமான கண்ணை உடையவரும் பாவிகள். கண் கோணலாக இருந்தால் திருடர். சாய்ந்த (அல்லது காய்ப்புண்ட) கண்ணை உடையவர் குரூரமனம் படைத்தவர். யானைக்கண் போன்ற கண்ணை அடைந்தவர் அரசர் ஆவர்.

(66) கம்பீரமான, அதாவது ஆழ்ந்த கண்களையுடையவர்கள் ஐச்வர்யத்தை அடைவர். நீலோத்பலம்போன்ற நிறம் கொண்டிருந்தால் வித்வான் ஆவர்; மிகவும் கறுப்பான கருவிழிகளானால் அந்தக் கண்கள் பிடுங்கப்பட நேரும்.

(67) பெரிய கண்களை உடையவர் மந்திரிபதவி அடைவர்; பொன் னிறமானால் பாக்கியம் கிட்டும். ஏழைகளின் கண்கள் மெலிந்து தோற்றம் அளிக்கும் புளகப்புடன் விளங்கினால் மிகுந்த செல்வமும் நல்ல போகமும் கிட்டும்.

(68) புருவம் மிகவும் உயர்ந்திருந்தால் அற்பாயுசு உள்ளவன்; விசாலமாகவும் உயர்ந்தும் இருந்தால் மிகுந்த இன்பத்தை அடைவான். ஒன்றையொன்று ஒவவாமல் இருந்தால் வறுமை. இளம் பிறைபோல் வளைந்த புருவமானால் தனவான் ஆவான்.

(69) நீண்டு தொடர்ச்சியான (ஆனால் நடுவில் கூடாத) புருவமானால் தனிகர்கள் ஆவர்; நடுவிலே பிளந்திருந்தால், செல்வமற்றவர்; நடுவில் தாழ்ந்து வளைந்திருக்கும் புருவமானால் புணரத்தகாத மாதரிடம் பற்றுதல் கொள்வர்.

யும் நல்ல வாசனையையும் அளித்து, சந்தோஷம், தனலாபம், இகலோக போகம் ஆகியவற்றையும் நல்கி, எப்போதும் தாம வழியில் நிலைக்கச் செய்கிறது.

(91) நீரினின்றும் உண்டாகும் காந்தி அழகாகவும், கறுப்பாகவும் நிர்மலமாகவும், பச்சை நிறமுள்ளதாகவும், கண்ணுக்கு இனிமையாகவும் இருக்கும். அது பிராணிகளுக்குத் தாயைப் போல எல்லா விஷயங்களிலும் சித்தியை அளித்து, பாக்கியம், மிருதுத்தன்மை, சுகம், இகலோக போகம் ஆகியவற்றுடன் மங்களத்தையும் நல்குவது.

(92) நெருப்பினின்றும் உண்டாகும் காந்தி குரூரம் வாய்ந்ததும், ஒதுக்கமுடியாததும், தாமரை, பொன் அல்லது நெருப்புப் போன்ற நிறத்தைக்கொண்டதும் தேஜஸ் (பிரபாவம்), பராக்கிரமம், சக்தி ஆகியவற்றோடு கூடியதும் ஆகும். அது மக்களுக்கு வெற்றியைக் குறிப்பதாக ஆகும். விரும்பிய பொருளைச் சீக்கிரம் அடையவும் செய்யும்.

(93) காற்றினின்றும் உண்டாகும் காந்தி அழுக்கடைந்தும், குரூரமாகவும், கறுத்தும், நல்ல வாசனை இல்லாததுமாக இருக்கும். அது கொலை, சிறை, நோய், அனர்த்தம், பொருளழிவு ஆகியவற்றை உண்டாக்கும். ஆகாய வெளியினின் ஏற்படும் காந்தி ஸ்படிகத்தை ஒத்து நிர்மலமாகவும், கம்பீரமாகவும் உள்ளது. அது அதிருஷ்டத்தோடு கூடி எல்லா நன்மைகளுக்கும் கருவூலம் போன்றது.

(94) நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி ஆகிய இவற்றினின்றும் உண்டாகுபவை ஐந்து. இன்னும் சிலர் சூரியன், விஷ்ணு, இந்திரன், யமன், சந்திரன் ஆகிய ஐவரிடமிருந்து தோன்றுபவையென வேறு ஐந்தையும் கூறுவர். அவற்றின் லட்சணம், பலன் ஆகியவை மேலே கூறியபடிதான். ஆகவே பத்து எனக் கொள்ளவேண்டியதில்லை. ஐந்தே ஆகும்.

(95) யானை, காளை, தேர், வெள்ளம், பேரிகை, மிருதங்கம், சிங்கம் இவற்றின் ஓசையைப் போன்ற குரலை உடையவர் அரசர்கள் ஆவர்; கழுதை, ஜர்ஜரப்பறை போன்ற கடூரமான குரலை உடையவர்கள் செல்வம், இன்பம் ஆகியவை அற்றவர் ஆவர்.

(96) உயிர்ப்பிராணிக்கு உடலிலே கொழுப்பு, எலும்புக் கசிவு (மஜ்ஜை), தோல், எலும்பு, சுக்கிலம், ரத்தம், மாமிசம் என ஏழு சாரங்கள் (உள் பலம்) உண்டு. அவற்றின் பயன் பின்வருமாறு:

(97) கண்ணம (அண்ணம்), உதடு, எயிறு, நாக்கு, கடைக் கண், குதம், கை, கால் ஆகியவை சிவந்திருந்தால், ரத்தத்தின் சாரம் நிறைந்திருக்கிறது என்றாகும். அப்படிப்பட்டவர்கள் மிகுந்த சுகம், பெண்டிர், பிள்ளை, செல்வம் ஆகியவற்றைப் பெற்றிருப்பர்.

பளபளமான தலையானால் பெரியோராவார்; மிகவும் பளபளமானால் அனர்த்தம் விளையும்.

(81) தலை, மயிர் மயிர்க்கால்களுக்கு ஒன்றாகவும், பளபளப்பாகவும், கறுத்தும், சுருண்டும், நுனி பிளக்காமலும், மிருதுவாகவும், மிகவும் அதிகமாக இல்லாமலும் இருந்தால் நல்ல சுகத்தை அனுபவிப்பனாகவோ அரசனாகவோ ஆவான்.

(82) தலைமயிர் மயிர்க்காலில் அதிகமான ரோமங்களும், ஏற்றக் குறைவாகவும், செம்பட்டை நிறமாகவும், தடித்தும், பிளந்த நுனியுடனும், சொரசொரப்பாகவும், குட்டையாகவும், அதிகமாகச் சுருண்டும், மிகச் செறிந்தும் இருந்தால் தனம் அற்றவன் ஆவான்.

(83) உடலின் எந்த உறுப்பும் உயர்ந்து, தசைப்பற்று இல்லாமல் நரம்பு எழுந்து இருக்குமானால், அது நன்மை பயக்காதது என்பது. மாறுபட்டு இருந்தால் நன்மை பயப்பதாகும்.

(84) உடலிலே மூன்று இடங்கள் விசாலமாகவும், மூன்றிடம் ஆழ்ந்தும், ஆறு உயர்ந்தும், நான்கு குறுகியும், ஏழு சிவந்தும், ஐந்து மெலிந்தும், ஐந்து நீண்டும் இருந்தால், அவன் அரசனாகவும் பூஜிக்கத் தக்கவனாகவும் ஆகிறான்.

(85) மனிதனுக்குத் தொப்புள், குரல், சுபாவம் (தன்மை) ஆகிய மூன்றும் ஆழ்ந்திருத்தலே நன்று. ஆண்களுக்கு மார்பு, நெற்றி, முகம் ஆகிய மூன்றும் விசாலமாக இருத்தல் சிறந்தது.

(86) இன்னும் மார்பகம், அக்குள், நகம், மூக்கு, வாய், பிடரி ஆகிய ஆறும் உயர்ந்து இருத்தல் நலம். ஆண்குறி, முதுகு, கழுத்து, கணைக்கால் ஆகிய நான்கும் குறுகியிருத்தல் நன்மை பயக்கும்.

(87) கடைக்கண், கால், கை, கன்னம், உதடுகள், நாக்கு, நகம், ஆகிய ஏழும் சிவந்திருந்தால் சிறந்ததாகும். பல், விரற்கணு, தலைமயிர், நகம், தோல், ஆகிய ஐந்தும் மெலிந்து இருந்தால் இன்பத்தை அளிக்கும். இன்பம் அனுபவிக்கப் பிறந்தவர்களுக்கு இவ்விதம் இராது.

(88) தவடை, கண், கை, மூக்கு, மார்பகம் (முலைக் காம்புகளுக்கு இடைப்பட்ட பாகம்) ஆகிய ஐந்தும் நீண்டதாயின் அரசர்கள்; அல்லாதார்க்கு இவ்விதம் இராது.

(89) ஸ்படிக ரத்தினத்தாலான குடத்தில் இட்ட விளக்கின் ஒளி பிரகாசிப்பது போல மனிதன், மிருகம், பறவை ஆகியவற்றின் உடலில் தோன்றும் பளபளப்பைக் கொண்டு தேஜஸின் குணங்களால் நன்மை தீமைகளைச் சாமுத்திரிகாலட்சணம் வல்லார் தெரிந்து கொள்வார்.

(90) பூமி தத்துவத்தினின்றும் உண்டாகும் காந்தி, பல், தோல் நகம், கேசம், புருவமயிர் ஆகியவற்றுக்கு மழமழப்புள்ள ஒரு பளபளப்

(98) மழமழப்பான தோலை உடையவர்கள மிகுந்த பணககாரர்கள்; மிருதுவான தோலானுல பாககியவானகள்; மெலலிய தோலானுல் நல்ல அறிஞர்கள் ஆவர். கொழுப்பு, எலும்புக் கசிவு (மஜஜை) ஆகிய சாரம் நிறைந்தவர்கள, அழகிய தேகததை உடையவர்களாகவும்; மக்கள, செலவம நிறைநதவாகளாகவும இருப்பா.

(99) எலும்பு சாரம மிகுந்தவன பருதத எலுமபை உடையவனுக இருப்பான. நலல பலமும், வித்தையும், அழகிய ரூபமும் பெறறிருபபான. தடித்து நிறைந்த சுககிலம் உடையவன பாககியவான். விததை, அழகு ஆகியவறறையும் அடைநதிருபபான.

(100) மாமிசஸாரம மிகுநதவன நனருக வளர்ச்சி பெற்றிருப்பான; விததுவானுகவும், செலவம் நிறைநதவனுகவும, அழகுளளவனுகவும் இருப்பான. உடல உறுபபுகள நன றக இணைநது பொருந்தி இருநதால அதற்கு ஸஙகாதம (சோககை, செறிவு) எனப் பெயர். அவவிதம் உளளவன சுகத்தை அனுபவிபபான.

(101) வாய, நாக்கு, பல, கண, நகம ஆகிய ஐநது இடஙகளிலும் பளபளபபான ஜொலிபபு காணபபடும. அவவிதம இருபபவனுககு செல்வம, மககள, பாககியம் ஆகியவை கிடடும. அவவிதம் இலலாமல் சொரசொரபபாக இருநதால வறுமை எறபடு ம.

(102) மிகுந்த பளபளபபான ஜொலிப்பு வாயநது ஒளி வீசும் உடலைப பெறறவா அரசராவா; நடுததரமாக உடையவாகள செலவம், மககள பெறறிருப்பா; ஜொலிபபு இலலாமல சொரசொரப்பாக இருந்தால் பொருளறறவராவா; அந்த ஜொலிபபு சுததமாக இருந்தால் நனமை பயககும. கலபபாக இருககுமானுல நனமை பயககாது

(103) சீலத்தை (முனவினைபபயனை) முகததிலிருநது அறியலாம். பசு, எருது, புலி, சிஙகம், கருடன ஆகியவறறின முகமபோல் இருந்தால், தடுகக முடியாத வீரத்தையும, எதிரிகளை வெல்லும வலலமையையும் பெறறு அரசர்கள ஆவார்.

(104) குரங்கு, எருமை, பனறி, ஆடு ஆகியவறறின முகம் போலிருந்தால் மக்கள, செல்வம, சுகம் ஆகியவற்றை அடைவர். கழுதை, ஒட்டகம ஆகியனவ போனற முகமும உடலும இருந்தால் செல்வம், சுகம் இல்லாத தரிததிரா ஆவா.

(105) உத்தமம, மத்திமம, அதமம ஆகிய மூவகை ஆடவாகளின உயரம் முறையே நூற்றெட்டு, தொணணூற்றாறு, எணபத்து நானகு அங்குலம (கைவிரல அளவு) கொணடதாக இருக்கும.

(106) தராசில நிறுத்தால் அரைப்பாரம எடையுளளவன மக்கள செல்வம் உளளவன; அதறகுக் குறைந்தால துக்கம் அனுபவிப்பான; ஒரு பாரம் எடை உளளவன தனிகன ஆவான. அதற்குமேல் ஒனறரைப் பாரம் எடையுளளவன பூமி முழுவதையும் ஆளும அரசன் ஆவன.

# எழுபதாம் அத்தியாயம்.

## மகளிர் இலக்கணம்.

(1) உயர்ந்த நுனி (முனை)யைப் பெற்று வழுவழுப்பாக உள்ள பாதம்; சிறுத்துச் சிவந்த நகங்கள்; சரியான வளர்ச்சியோடு அழகாக வெளிக்குத் தெரியாமல் மறைந்திருக்கிற பரடு (கணுக்கால்); தாமரை மலரின் காந்தியைப் பெற்ற உள்ளங்கால்; ஆகியவை அமைந்த பெண்ணை மணந்து கொள்பவன் தரணி ஆளும் அரசனாவான்.

(2) மீன், அங்குசம், தாமரை, தானியம் (நெல்), வச்சிராயுதம், கலப்பை, கத்தி ஆகியவற்றின் குறிகளைக் கொண்டு, வேர்வையில்லாமல் மிருதுவான உள்ளங்கால்களைப் பெற்றுள்ள பாதங்கள்; மயிர், நரம்பு இல்லாமல் (தோன்றாமல்) உருண்டு திரண்டு உள்ள கணைக்கால்; ஒன்றையொன்று ஒத்துப் பூட்டுப் பருக்காமல் சரியாகவுள்ள முழங்கால்கள்; ஆகியவை சிறந்தவை.

(3) நெருங்கி, யானையின் துதிக்கையை ஒத்து, மயிர் இல்லாமல் காணும் தொடை; அரசிலையைப் போன்று விசாலமான அல்குல்; பரந்து ஆமை முதுகு போல் உயர்ந்து தோன்றும் யோனியின் நெற்றி; மறைந்து தோன்றும் மணி; இவை செல்வத்தை அளிக்கும்.

(4) சதைப் பற்று மிகுந்து, பருத்து, விசாலமான நிதம்பப் பிரதேசத்தை உடைய மங்கை அரைநாண்மாலை என்னும் ஆபரணத்தைத் தரிக்கும் பேறு அடைவாள். ஆழ்ந்து அகன்று வலஞ் சுழி பெற்ற தொப்புள் சிறந்தது.

(5) மூன்று (சதை) மடிப்புகள் பெற்று, மயிர் இல்லாமல் உள்ள இடை; ஒன்றையொன்று ஒத்து நெருங்கிப் பருத்துக் கடினமாக விளங்கும் கொங்கைகள்; மயிரில்லாமல் மிருதுவான மார்பகம், சங்குபோல் உயர்ந்த கழுத்து; ஆகியவை பெற்ற மங்கையர் சிறந்தவர்கள்; பொருள், இன்பம் ஆகியவற்றை அடைவார்கள்.

(6) செம்பருத்தி மலரை ஒத்துச் சதைப் பற்று மிகுந்து, அழகிய கொவ்வைப் பழத்தின் தோற்றம் வாய்ந்த உதடு; மல்லிகை மொக்கைப் போன்று ஒன்றுக்கொன்று வேறுபாடு இல்லாமல் வரிசையாக உள்ள பற்கள்; இவை பெற்ற பெண் இல்லற இன்பத்தையும் செல்வத்தையும் அடைவாள்.

(7) (நயம்) தாக்ஷிண்யத்துடன் கூடி, வஞ்சனையற்று, குயில், அன்னம் ஆகியவற்றின் குரலைப்போல் அழகான பேச்சை உடையவள் துன்பத்தை அடையமாட்டாள்; குறைவற்ற சௌக்கியத்தை அடைவாள். சமமாக ஒன்றையொன்று ஒத்த பக்கத்தைப் பெற்று நேராகவுள்ள அழகிய மூக்கு, கருநெய்தல் இதழின் காந்தியை வெல்லும் கண் ஆகியவை சிறந்தவை.

(116) எவனுக்குக் களைப்படைந்த சமயம் வாகனமும், பசித்த சமயம் ஆகாரமும், தாகம் எடுத்த வேளையில் தண்ணீரும், பயம் உண்டான போது பாதுகாப்பும் கிட்டுகிறதோ அவனைப் புண்ணியவான் என்று சாமுத்திரிகா லட்சணம் அறிந்தவர் கூறுவர்.

(117) இந்தப் புருஷ லக்ஷணம் மாமுனிவர் கூறியதைக் கொண்டு என்னால் சுருக்கமாக வரையப்பட்டது. இதைப்படித்தவன் அரசனுக்கு வேண்டியவனாகவும் எல்லோருக்கும் பிரியனாகவும் ஆவன.

69-ஆம் அத்தியாயம் சோதிட நூலை அனுசரித்து ஜனன காலத்தில் பலம் பெற்று விளங்கும் கிரக நக்ஷத்திரங்களைக் கொண்டு உருக்கப் பெறும் ஐந்து வித புருஷர்களின் லக்ஷணங்களைக் கூறுகிறது. இவ்விடம் மொழி பெயர்த்துக் கொடுக்கப் பெறவில்லை.

(16) காலின் சுண்டு விரலோ அதை அடுத்த விரலோ பூமியில் பதியாமல் இருந்தாலும், கால் பெரு விரலுக்கு அடுத்த விரல் பெரு விரலைக் காட்டிலும் நீண்டிருந்தாலும் அவள் கற்பில்லாதவள்; மிகுந்த பாபத்தைச் செய்பவள்.

(17) மேல் பாகம் பருத்து, உருண்டையாகவோ சதைப்பற்றுடன் திரண்டோ, நரம்பு தெரியும்படியாகவோ, வற்றியோ, மயிர் நிறைந்தோ, அதிகமான சதைப்பற்றுடனோ உள்ள கணைக்கால்; ஆழ்ந்தோ மிகச் சிறுத்தோ, அப்பிரதக்ஷிணமான சுழியை உடையதாகவோ அமைந்த யோனி, பானைபோன்ற வயிறு ஆகியவை மங்கையருக்குத் துக்கத்தை அளிக்கும்.

(18) பெண்களுக்குக் கழுத்துக் குட்டையாகி, குறுகியிருந்தால் மிகவும் வறுமை; நீண்டிருந்தாலோ குல க்ஷயம்; பருத்திருந்தாலோ அவள் குரூரம் வாய்ந்தவளாக இருப்பாள்.

[குல க்ஷயம் = வம்ச நாசம் அல்லது பரம்பரையாக வருகிற எலும்புருக்கும் நோய்.]

(19) சாய்ந்த (அதாவது ஓரக்கண்) பார்வை பெற்றோ, பொன்னிறமாகவோ, கறுப்பும் மஞ்சளும் கலந்த (சியாவ நீல) நிறம் வாய்ந்ததாகவோ உள்ள கண்களையுடைய பெண் நடத்தை கெட்டவள்; குறுநகை புரியும்போது கன்னங்களில் குழி விழுந்தால் அவள் சந்தேகமில்லாமல் விபசாரி ஆவாள்.

(20) ஒருத்தியின் நெற்றி (தொங்கிக் கொண்டிருந்தால்) தாழ்ந்திருந்தால் அவளுடைய மைத்துனன் மரணம் அடைவான். வயிறு தொங்கினால் மாமனுக்கும், பிருஷ்டபாகம் தொங்குவதானால் கணவனுக்கும் மரணம் நேரும். மயிர் மிகுந்து நெருங்கிக் கூடிய மேல் உதடு கீழ் உதடுகளையுடையவளும் கணவனைக்காட்டிலும் உயரமானவளும் நன்மை பயக்கமாட்டாள்.

(21) மயிருடன்கூடியோ, மாசு நிறைந்தோ, நன்கு ஒளி பெற்றோ, ஒன்றுக்கொன்று சரியில்லாமலோ உள்ள கொங்கைகளும் காதுகளும் மங்கையருக்குக் கிலேசத்தைக் கொடுக்கும். பருத்தோ, கோணலாகவோ, ஒழுங்கில்லாமலோ, கறுத்த சதை மிகுந்தோ காணப்படும் பற்களையுடைய பெண்ணும் கிலேசத்தை அடைவாள்; அவள் திருட்டுத்தனம் உள்ளவளாகவும் இருப்பாள்.

(22) கையில் உள்ள ரேகைகள் விகாரமாகவும், செந்நாய், காக்கை கழுகு, பாம்பு, கோட்டான் இவை போன்றனவாகவும், கைகள் சுருங்கியோ நரம்பு தோன்றியோ உடைய பெண் சுகம், தனம் ஆகியவை இல்லாதவள்.

(23) மேல் உதடு உயர்ந்தும் தலைமயிரின் நுனி வழுவழுப்பாக இல்லாமலும் உடையவள் கலகத்தில் ஆசையுள்ளவளாக இருப்பாள். பார்வைக்கு விகார உருவம் படைத்த பெண்ணிடம் பெரும்பாலும் குறைகள் தோன்றுகின்றன. அதேபோல அழகான உருவம் பெற்றவளிடம் நல்ல குணங்கள் தோன்றுகின்றன.

## செய்யுள் முதற் குறிப்பு அகராதி

### புருஷ லட்சணம்

# செய்யுள் முதற் குறிப்பு அகராதி

## புருஷ லட்சணம்

(எண்—செய்யுள் எண்)

## ஸ்திரீ லட்சணம்.

(எ—செய்யுள் எண்)

ஸ்திரீ லட்சணம்—தொடர்ச்சி.



நந்தி நூல் (சர நூல்).

நந்தி நூல் (சரநூல்)—தொடர்ச்சி.